கொழும்புத் தமிழ்ச் சங்க வெளியீடு

# வையா பாடல்

பதிப்பாசிரியர்
கலாநிதி க.செ.நடராசா

யாழ்ப்பாணம்

செகராசசேகர மகாராசாவின்

சமஸ்தான வித்துவான்

வையாபுரி ஐயர் செய்த

# வையா பாடல்

பதிப்பாசிரியர்

கலாநிதி க. செ. நடராசா

கொழும்புத் தமிழ்ச் சங்க வெளியீடு

1980

# VAIYĀ PĀṬAL

OF

# VAIYĀPURI AIYAR

*Edited by*

**K. S. NADARAJAH M. A., Ph. D.**



*Published by*

THE COLOMBO TAMIL SANGAM
7, 57th LANE,
COLOMBO-6.

1980

*Price:* 10-00

# பொருளடக்கம்

# பிழை திருத்தம்

| பக்கம் | பந்தி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 12 | 4 | கூளங்கை | கூழங்கை |
| 13 | 1 | சமதுதி | சமதூதி |
| 14 | 4 | கலிபிறந் | கலிபிறந்து |
| 20 | 3 | தலைவலை | தலைவனை |
| 23 | 1 | வன்னிர் | வன்னியர் |
| 42 | செய்யுள் 40 | தக்கவர்கன் | திக்கவரீகள் |

# தந்தைக் குபயமிது

செந்தா மரைவரகு செந்நெல் பனைதெங்கு
நந்தா வளர்நாவற் குழியூர்க் குபேரநெறிச்
செந்தார்க் கனகசபைச் செம்மல், நெறிநின்று
தந்த உயர்சால்பு தழைக்கு மொருதனையன்,

எந்தை செல்லப்பா எழிலார் குணநலத்துத்
தந்தை மகற்காற்றத் தக்க உதவியினை
எந்த வகையாலு மியற்றி யிசைகொண்ட
சிந்தைக் கினியவென் தந்தைக் குபயமிது.

—க. செ. நடராசா

## கொழும்புத் தமிழ்ச் சங்கத்தின் ஏனைய வெளியீடுகள்:-

1. பாவலர் சரித்திர தீபகம்: —பகுதி 1
2. பாவலர் சரித்திர தீபகம்: —பகுதி 2
3. சிறுவர் கதைகள்
4. சேதுபந்தனம்

—மொழிபெயர்ப்புக் கதைகள்

5. அபிவிருத்திப் புவியியற்பொருளியல்

விபரங்களுக்கு:

கொழும்புத் தமிழ்ச் சங்கம்
7, 57ஆம் ஒழுங்கை,
கொழும்பு-6.

தொலைபேசி-:
83759

# முகவுரை

ஈழத் தமிழ்மக்கள் இந்நாட்டுப் பழங்குடி மக்கள். அவர்கள் பற்றிய வரலாற்றுச் செய்திகள் சிதைந்து கிடக்கின்றன. கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவராகிய பூதன்தேவனார் ஈழநாட்டிலிருந்து மதுரைக்குச் சென்று சங்கமமர்ந்தார் என நூல்கள் காட்டுகின்றன. கி. மு. 205 முதல் 161 வரை அனுராதபுரத்திலிருந்து ஈழத்தை ஆண்ட எல்லாள மன்னன் தமிழனெனச் சிங்கள சமய காவியமாகிய மகாவம்சம் கூறுகின்றது. கி.மு. மூன்றும் நூற்றாண்டில் தேவநம்பிய திசனின் ஆட்சியின்போது மகிந்தன் பௌத்த சமயத்தை இந்நாட்டிற் பரப்புவதற்குமுன் இங்கு நிலவிய பண்பாடான சமயம் சைவசமயம் என்பதைக் கல்வெட்டு ஆய்வுகளின் மூலம் பேராசிரியர் எல்லாவல என்பார் தாம் எழுதிய 'பண்டைக்கால இலங்கையின் சமூக வரலாறு' (பக்.158) என்னும் நூலில் நிறுவியுள்ளார். எல்லாள மன்னனிடமிருந்து ஆட்சியைக் கைப்பற்ற விரும்பிய தென்னிலங்கை இளைஞனாகிய துட்டகைமுனு, முருகன் தலமாகிய கதிர்காமத்துக்குச் சென்று அவன் அருள் பெற்றதாகச் சிங்கள காவியங்கள் கூறுகின்றன. இவை மட்டுமன்றி இலங்கையை ஆண்ட இராவணன் ஒரு சைவசமயத்தவன் என்பதும் திராவிடக் கலைகளை ஆர்வமுடன் பரப்பிய தமிழ் மன்னன் என்பதும் வரலாறு காட்டும் செய்திகளாகும்.

அண்மைக்கால ஆராய்ச்சிகளின்படி இந்திய சமுத்திரத்தின் ஒரு பகுதியில் விளங்கிய குமரிநாடு இந்தியா, இலங்கை என்பனவற்றை உள்ளடக்கிய நீண்ட ஒரு கண்டம் என்பதும், கடல்கோள்களால் அந்நாட்டு மக்கள் வடக்கே சென்று குமரி எனப்படும் சுமர் நாட்டிலும் சிந்துநதிப் பள்ளத்தாக்கிலும் கி. மு. 4000ஆம் ஆண்டுக்கு முன்னரே பழந்தமிழ் நாகரிகத்தை நிலைநாட்டி விட்டனர் என்பதும் கல்வெட்டு ஆராய்ச்சிகளால் அறியப்படுகின்றன. ஈழம் இப்பரந்த நிலப்பரப்பின் ஒரு பகுதியாக விளங்கி வருகின்றது என்பது கூறாமலே விளங்கும். இத்தகைய ஈழத்தமிழ் மக்களுடைய தொடர்

பான வரலாற்றை அறிந்துகொள்ளும் ஆவல் இன்று மக்களுக்கு உண்டாயினும், அவ்வரலாற்றைக் கூறும் பண்டைய நூல்கள் பல இன்று அகப்படவில்லை. இந்தவகை நூல்களுள் ஒன்றுமட்டும். இப்பொழுது உள்ளது. அது யாழ்ப்பாணத் தமிழ் வேந்தர் காலத்தில் செகராசசேகரன் அவைக்களப் புலவராக விளங்கிய வையாபுரி ஐயர் என்பவரால் யாக்கப்பட்ட வையாபாடலாகும். 'இலங்கை மண்டலக் காதை' என்பது இந்நூலின் இயற்பெயராகும். 105 செய்யுள்களைக் கொண்ட இந்நூல் கூறும் பொருளை விரித்து விளக்குவது யாழ்ப்பாண வைபவமாலை என்னும் நூலாகும். இதன் பல்வேறு பிரதிகளைத் தேடிப்பெற்று ஒப்பு நோக்கி ஆராய்ந்து சிறந்ததோர் ஆய்வுநூலைத் தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு அளிக்கின்றார் நாவற்குழியூர் நடராசன் என அனைவரும் அழைக்கும் கலாநிதி. க. செ. நடராசா அவர்கள். நூலைப் பதிப்பிக்கும் பொழுது கையாள வேண்டிய உத்திகள் பலவற்றையும் கடைப்பிடித்து வையாபாடல் வெளிவருகிறது. பாடபேதங்கள் அனைத்தும் நூலின் அடிக்குறிப்பில் விளக்கமாகக் கொடுக்கப்படுகின்றன. நூலின் ஆராய்ச்சி முன்னுரையானது ஈழத்தமிழர் வரலாற்றைப்பற்றி அறிய விரும்பும் அனைவருக்கும் ஒரு கருவூலமாகப் பயன்படும்.

நண்பர் கலாநிதி க. செ. நடராசா அவர்கள் ஆழமான தமிழ்ப்புலமையும் ஆய்வு வன்மையும் பெற்றவர். ஈழத்துத் தமிழிலக்கிய வரலாற்றை நுண்ணிதாக ஆராய்ந்து உலகத் தமிழாராய்ச்சி மகாநாடுகளில் பல ஆய்வுக் கட்டுரைகளைச் சமர்ப்பித்தவர். இவர் கொழும்புப் பல்கலைக்கழகத்துக் கலாநிதிப் பட்டத்திற்குச் சமர்ப்பித்த ஈழத்துத் தமிழிலக்கியம் பற்றிய ஆய்வுநூல், வெளிநாட்டுத் தேர்வாளர்களின் பாராட்டைப் பெற்றது என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது. வையாபாடலைத் தொடர்ந்து அந்நூலும் வெளிவரவேண்டுமென்று விரும்புகிறேன்.

ஆ. சதாசிவம்

*10 - 10 - 1980*

தமிழ்ப் பேராசிரியர்,
கொழும்புப் பல்கலைக் கழகம்.

# முன்னுரை

யாழ்ப்பாணத் தமிழ் மன்னர் காலப்பகுதியை அண்டிச் செய்யப்பட்ட பல நூல்களுள் மிகச் சிலவே இப்பொழுது எமக்குக் கிடைக்கக் கூடியனவாயிருக்கின்றன. அவற்றுட் கைலாயமாலை, வையாபாடல் ஆகியன வரலாற்றம்சங் கொண்ட நூல்கள் என்றவகையிற் குறிப்பிடத்தக்கனவாம்.

## நூற் பதிப்புகளும் ஏட்டுப் பிரதிகளும்

வையா பாடல் என்ற நூல், ஏட்டுப் பிரதிகளாகவே இந்நூற்றுண்டின் ஆரம்ப காலம்வரை கிடந்தது. யாழ்ப்பாணம் மத்திய கல்லூரியில் ஆசிரியராயிருந்த J. W. அருட்பிரகாசம் அவர்கள் 1921ஆம் ஆண்டு இதனை முதன் முதலாக அச்சுவாகனமேற்றினர். அவருக்கு அரிதிற் கிடைத்த ஏட்டுப் பிரதியிற் செய்யுட்கள் எழுதப்பட்டிருந்தவாறே அவற்றைத் தாம் பதிப்பித்த புத்தகத்தின் ஒரு பக்கத்திலும், அவற்றிலே தாம் செய்த திருத்தங்களை அதன் எதிர்ப்பக்கத்திலுமாக அச்சிட்டு வெளியிட்டமை அவர் செய்த பெருஞ் சேவையாகும். அவருக்குக் கிடைத்த ஒரேயொரு ஏட்டுப் பிரதி பல வழுக்களையுடையதாயிருந்ததால், அவரால் அந் நூலைத் திறம்படப் பதிப்பிக்க முடியாமற் போயிற்று.

மலேசியாவைச் சேர்ந்த பினங்கில் திரு. இ. து. சிவானந்தன் என்பார் இந்நூலை 1922ஆம் ஆண்டிற் பதிப்பித்துள்ளார். இவருக்குக் கிடைத்துள்ள ஏட்டுப்பிரதி, முன்னையவர்க்குக் கிடைத்த ஏட்டுப்பிரதியைவிடப் பொருள் விளக்கங் கூடியதாயிருப்பினும், இவரது பதிப்பில் மலைவுகள் பல நிறைந்திருக்கின்றன. திரு. இ. து. சிவானந்தன் அவர்களுக்கும் ஒரேயொரு ஏட்டுப்பிரதி கிடைத்தமையே அதற்குக் காரணமாயிருக்கலாம். அப்பொழுது வையா பாடலின் ஏட்டுப் பிரதிகள் அருகியிருந்தமையால், அவர்களாற் பல பிரதிகளைத் தேடிக் காண்பது அரிதாயிருந்தது போலும். ஒரு பிரதி கிடைத்தமையே பெரும் பாக்கியமெனக் கருதினர் என்று தம் பதிப்பின் முகவுரையிற் கூறியுள்ளார்.

வையாபாடலைக் கல்வெட்டென்ற பெயருடனும் வையா என்ற பெயருடனும் பிற்காலத்தில் யாரோ வசனமாக எழுதிவைத்தனர். அதனுல் வையாபாடலை விடுத்துப் பலரும் வையா வசனத்தையே ஏடுகளில் எழுதிவைக்கத் தலைப்பட்ட னர். இவ்வசன நூல், அதன் மூலநூலாகிய வையாபாடலைப் பற்றியறிவதற்குப் பெரிதும் பயன்படுவதொன்ருகையால், அதனை ஏட்டுப்பிரதிகளிலிருந்தெடுத்து, நல்லூர் சுவாமி ஞானப்பிரகாசர் அவர்கள் 1921ஆம் ஆண்டிலே அச்சிற் பதிப்பித்தார்.

இவ்வாறு 1921ஆம் 1922ஆம் ஆண்டுகளிலே வையா பாடலை மக்களுக்கு அறிமுகஞ் செய்யும் முயற்சிகள் பல நடைபெற்றபோதும், அந்நூலின் முக்கியத்துவத்தைப் பலர் உணராதிருந்தமையால் அவை அதிக பலனளிக்கவில்லை. அது ஆதாரபூர்வமற்ற நூலென்றே பலருங் கருதியொதுக்கி விட்டனர். எனவே, அவை மறுபதிப்பின்றி மாய்ந்தன. அப் பதிப்புக்களின் பிரதிகள் பெறுவதே இப்பொழுது அபூர்வ மாகிவிட்டது.

J. W. அருட்பிரகாசம் அவர்கள் பதிப்பித்த வையா பாடல் நூலின் பிரதியொன்றினை அன்பர் F. X. C. நடராசா அவர்கள் தந்துதவினுர்கள். திரு. இ. து. சிவானந்தன் பினுங் கிற் பதிப்பித்த பிரதியொன்றினை முதலியார் குல. சபா நாதன் அவர்கள் தந்துதவினுர்கள். சுவாமி ஞானப்பிரகாசர் அவர்கள் பதிப்பித்த வையாபாடலின் வசனம் கிடைத்தற் கரிதாயிற்று; எனினும், 'கல்வெட்டும் வையாவும் செய் யேடும் தேர்ந்தெடுத்தெழுதியது' என்று தலைப்பிடப்பட்ட பழைய ஏட்டுப் பிரதியொன்றினைக் கலாநிதி க. கணபதிப் பிள்ளை அவர்கள் முப்பது ஆண்டுகளுக்கு முன் இலங்கை வித்தியாபோதினியென்ற இதழில் வெளியிட்டிருந்தார்கள். வசனங்களிலிருந்த வழுக்களெவையுங் களையாது ஏட்டிற் காணப்பட்டவாறே அவ் வையாபாடலின் வசனம் பிரசுரிக் கப்பட்டிருந்தது.

இவற்றுடன் ஒப்பிட்டுப் பார்ப்பதற்கு மூல ஏட்டுப்பிரதி யொன்றினையும் பெறவிரும்பி, இலங்கையிலே தமிழர் குடி யிருக்கும் பல பாகங்களிலுந் தேடி, இறுதியிலே திருக்கோண மலையில் ஆசிரியர் சிவதாசன் என்பவரிடமிருந்து ஓர் ஏட்டுப் பிரதி பெற முடிந்தது. அது வழுக்கள் குறைந்ததாயிருந் தமை, இப்பதிப்பினை இயன்றவரை திறம்பட ஆக்குவதற்குப்

பெரிதும் பயனுடையதாயிற்று. இவ்வாறு கிடைத்த பிரதிகளை ஒப்பிட்டுப் பரிசோதித்துப் பார்த்துச் சரியானவையெனத் தெரிந்த பதங்களைக் கைக்கொண்டு, செய்யுள்வகை கண்டு, ஓசைநயங் குன்றாது அடிவரையறை செய்து இப்பதிப்பு வெளிவருகிறது. பிரதிகள்தோறுங் காணப்பட்ட பாட பேதங்கள் இப்பதிப்பில் அடிக்குறிப்பாக இடப்பட்டிருக்கின்றன.

நன்றி

பாக்களின் சீர் வகுத்துச் செய்யுள்வகை காண எமக்குப் பெரிதும் உதவிய புலவர் சிவங் கருணாலய பாண்டியனார் அவர்களுக்கும், இப்பதிப்புக்கும் ஆய்வுரைக்கும் வேண்டிய அறிவுரைகள் வழங்கிய பேராசிரியர் வி. செல்வநாயகம் அவர்களுக்கும், முகவுரை வழங்கிச் சிறப்பித்த பேராசிரியர் ஆ. சதாசிவம். அவர்களுக்கும் எமது மனமார்ந்த நன்றி உரியதாகும். இப்பதிப்பினைச் செவ்வனே செய்வதற்கு வேண்டி நூல்களைத் தந்துதவிய அறிஞர்களும், இதனை வெளியிட முன்வந்த கொழும்புத் தமிழ்ச் சங்கமும் இதற்காற்றிய சேவை அளப்பரியது.

— க. செ. நடராசா

3, மும்தாஸ் மகால் வீதி,
கொழும்பு-6.

# பதிப்புரை

**சென்ற** சில ஆண்டுகளாகக் கொழும்புத் தமிழ்ச் சங்கம் அரிய தமிழ் நூல்களையும், மாணவர் உபயோகத்துக்குரிய தமிழ் நூல்களையும் பதிப்பித்து வெளியிட்டு வரும் பணியைச் செய்து வருகிறது. இத்தொடரில், ஈழத்திலே தோன்றிய பழந் தமிழ் நூல்களுளொன்ருய வையாபாடல் என்ற நூலைப் பதிப் பித்து வெளியிடும் வாய்ப்புக் கிடைத்துள்ளது.

வையாபாடல், யாழ்ப்பாணத் தமிழ் மன்னர் காலத்துச் செய் யப்பட்ட நூல்களுளொன்ருகும். அக்காலச் சரித்திரப் பகுதிகளைத் தெளிவுபடுத்துவதற்கு உதவிய மூல நூல்களுள் இதுவும் ஒன்று என்பது அறிஞர் கருத்து. அத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த நூலாய வையாபாடலின் பிரதிகள் இப்பொழுது கிடைத்தற்கரிதா யுள்ளன. இந்நூலின் திருத்தமான பதிப்பெதுவும் இதுவரை வெளிவராதமை ஒரு பெருங்குறையாகவே இருந்து வந்தது.

இவ்வரிய நூலைக் கலாநிதி க. செ. நடராசா அவர்கள் ஆராய்ந்து திருத்தமான பதிப்பொன்றினைத் தயாரித்து, வைத் திருக்கிருர் என்பதை அறிந்து, அதனை அச்சிட்டு வெளியிட எமது சங்கம் தீர்மானித்தது. இப்பதிப்பில் யாழ்ப்பாணச் சரித் திரம் பற்றிய பல புதிய கருத்துக்களும், வன்னியர் குடி யேற்றம் பற்றிய பல்வேறு தகவல்களும் தெளிவு படுத்தப் பட்டுள்ளமையால், இலங்கையிலே தமிழர் வரலாறு பற்றிய புதிய நோக்கினை ஏற்படுத்துவதற்கு இது உதவுமென நம்புகிருேம்.

வையாபாடற் செய்யுட்களைப் படித்து, அவற்றின் பொருளை எளிதில் விளங்கிக்கொள்ளும் வகையிலே சீர்வகுத்துச் செய்யுள் நூலாக அமைத்துப் பாடபேதங்களை அடிக்குறிப்பாகக்கொண்டு, ஆய்வுரையுடன் வெளி வரும் முதற் பதிப்பு இதுவேயாகும்.

ஈழத் தமிழர் வரலாற்றிலே ஒரு புதிய நோக்கினை ஏற்படுத் தப் பயன்படும் வையாபாடலின் இப்பதிப்பினை அச்சிட்டு வெளி யிடுவதிற் கொழும்புத் தமிழ்ச் சங்கம் மகிழ்ச்சியடைகிறது. இதனைத் தயாரித்துத் தந்த எமது சங்கத் தலைவர் கலாநிதி க. செ. நடராசா அவர்களுக்கும், இப்பதிப்பினை அமைவுற அச்சிட்டுத் தந்த சிலோன் நியூஸ்பேப்பர்ஸ் லிமிட்டெட்டாருக்கும் எமது நன்றி உரித்தாகும்.

க. இ. க. கந்தசுவாமி,<br>
பொதுச் செயலாளர்,<br>
கொழும்புத் தமிழ்ச் சங்கம்.

7, 57ஆம் ஒழுங்கை,<br>
கொழும்பு-6.<br>
1980, ஆவணி.

# வையாபாடல் ஆய்வுரை

## நூலாசிரியர் வரலாறு.

வையாபாடல் என்ற நூலை, யாழ்ப்பாண மன்னர்களுள் ஒருவனுன செகராசசேகரனின் அவைப்புலவர் வையாபுரி ஐயர் இயற்றினர் என்று வையாபாடல் ஏட்டுப்பிரதிகள் குறிக்கும். யாழ்ப்பாண வைபவமாலை என்ற நூல்[1], "வையா என்னும் புலவர் சயவீரசிங்கை ஆரியன் எனப்படும் ஐந்தாம் செகராசசேகரன் காலத்தில் (கி. பி. 1380-1414) சமஸ்தானப் புலவராய்க் கீர்த்தியுடன் விளங்கினர்; இவர் 'வையா பாடல்', 'பரராசசேகரன் உலா', 'பரராசசேகரன் இராச முறை' என்னும் நூல்களின் ஆசிரியர்", எனக் கூறும்.

யாழ்ப்பாண வைபவமாலையின் ஆசிரியர் மாதகல் மயில் வாகனப் புலவர் வையா என்னும் புலவர் மரபிலுதித்தவர் என்பர். அதற்கு ஆதாரமாக, யாழ்ப்பாண வைபவமாலைச் சிறப்புப்பாயிரச் செய்யுட்களுளொன்ருய,

'ஒண்ணலங்கொள் மேக்கறானென் ருேதுபெயர்
பெற்றவிற லுலாந்தே சண்ணல்
பண்ணலங்கொள் யாழ்ப்பாணப் பதிவரலா
றுரைத்தமிழாற் பரிந்து கேட்கத்
திண்ணிலங்கு வேற்படையான் செகராச
சேகரன்றெல் லவைசேர் தொன்னூல்
மண்ணிலங்கு சீர்த்திவையா மரபில்மயில்
வாகனவேள் வகுத்திட் டானே.'

என்ற பாடலையும், மயில்வாகனப் புலவரிபற்றிய புலி யூரந்தாதிச் சிறப்புப் பாயிரச் செய்யுட்களு ளொன்ருய,

'நெய்யார்ந்த வாட்கைப் பரராச சேகரன் பேர்நிறுவி
மெய்யான நல்ல கலைத்தமிழ் நூல்கள் விரித்துரைத்த
வையாவின் கோத்திரத் தான்மயில் வாகனன் மாதவங்கள்
பொய்யாத வாய்மைப் புலியூரந் தாதி புகன்றனனே.'

---

1. முதலியார் குல. சபாநாதன் பதிப்பு - 1953 - பக். XII

என்ற பாடலையும் காட்டுவர், மயில்வாகனப் புலவரை இங்கு மயில்வாகன வேள் என்று குறித்திருப்பதனையும், வையாபாடல் ஆசிரியரை வையாபுரி ஐயர் என்று ஏடுக ளிற் பொறித்திருப்பதனையும் உற்று நோக்கின், அவ்விரு வரும் ஒரே மரபினராதல் சாலுமா என்று சந்தேகப்பட இடமுண்டு. இது ஆராயத்தக்கதே. வையாபாடல் ஏழாஞ் செய்யுளில் ஆக்கியோன் பெயர் கூறப்படுமிடத்து,

'குலம்பெறு ததீசிமா முனிதன் கோத்திரத்
திலங்குவை யாவென விசைக்கு நாதனே'

என்றிருப்பதால், இந்நுலாசிரியர் பெயர் 'வையா' அன்றி 'வையாநாதன்' என்றே வழங்கியிருத்தல் கூடும்.

## நூலாசிரியர் காலம்.

### (அ) புறச்சான்று.

இந்நூலாசிரியர் காலத்தை நிறுவுவதற்கு, யாழ்ப்பாண வைபவமாலையாசிரியர் காலநிர்ணயம ஏற்றதொரு புறச் சான்றாயமையும். மயில்வாகனப் புலவர் எழுதிய யாழ்ப்பாண வைபவமாலையின் சிறப்புப் பாயிரச் செய்யுளொன்று[1] அவர் காலத்தில் இலங்கையில் வாழ்ந்த 'மேக்கறூனென்றோதும் உலாந்தேசு மன்ன'னைப் பற்றிக் குறிப்பிடுகிறது. கி. பி. 1736ஆம் ஆண்டில் 'இயன் மாக்காரா' என்ற ஒல்லாந்தத் தேசாதிபதி யாழ்ப்பாணப் பகுதியில் ஒல்லாந்தருக்கிருந்த பாகங்களைப் பரிபாலித்தானெனத் தெரிகிறது[2]. 'மேக்கறூன்' என்பது 'இயன் மாக்காரா'வைக் குறிக்குமெனக் கருதி மயில் வாகனப் புலவர் காலமும் பதினெட்டாம் நூற்றாண்டின் நடுப்பகுதியாகுமென யாழ்ப்பாணச் சரித்திர ஆசிரியர்கள் கருதினர்.

---

1. உரராசர் தொழுகழன்மேக் கறூனென் றோதும்
   உலாந்தேசு மன்னனுரைத் தமிழாற் கேட்க
   வரராச கைலாய மாலை தொன்னூல்
   வரம்புகண்ட கவிஞர்பிரான் வையா பாடல்
   பரராச சேகரன்றன் னுலாவுங் காலப்
   படிவமுவா துற்றசம்ப வங்க டட்டுந்
   திரராச முறைகளுந்தேர்ந் தியாழ்ப்பா ணத்தின்
   செய்திமயில் வாகனவேள் செப்பி னானே.

2. Maccara was the Administrator of the Dutch possessions in Jaffna in 1736 says Dr. S. Paranavitana in his article 'The Arya Kingdom in north Ceylon', published in the journal of the Ceylon Branch of the Royal Asiatic Society, new series, Volume 7, Part 2, Page 176, 177(1961).

அரசாங்க சுவடிப் பாதுகாப்பு நிலையத்திலுள்ள ஒல்லாந்தர் காலத்துப் பத்திரங்களில், 1706 ஆம் ஆண்டில் 'பீற்றர் மாக்காரா, (Peter Macare) என்பவர் 'பிசுக்கால்' அதிகாரியாக யாழ்ப்பாணத்திலிருந்தார் என்னும் குறிப்புக் காணப்படுவதால், அவருடைய விருப்பப்படியே மயில்வாகனப் புலவர் வைபவமாலையை இயற்றினரென வ. குமாரசுவாமியவர்கள் இந்துசாதனப் பத்திரிகையில் எழுதிய கட்டுரையொன்றிற் குறிப்பிட்டுள்ளார்[1]. காலியிலே தளபதியாயிருந்த 'இயன் மாக்காரா' யாழ்பாணச் சரித்திரத்தில் நாட்டமுடையவராயிருந்தார் என்பது பொருத்தமற்ற கூற்றெனக் கொண்டு, மயில்வாகனப் புலவர் வைபவமாலையை இயற்றிய காலம் கி. பி. 1706 ஆம் ஆண்டென்றே திரு. வ. குமாரசுவாமி கொள்கிறுர்.

தி. சதாசிவ ஐயர் அவர்கள் தாம் பதிப்பித்த கரவை வேலன் கோவையிற் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

"வண்ணை வைத்தீஸ்வர சுவாமிகோயிலைக் கி. பி. 1787 இற் கட்ட ஆரம்பித்து 1791 இல் முடித்துக் கும்பாபிஷேகம் செய்வித்த வண்ணை வைத்தியலிங்கச் செட்டியாரும் மயில் வாகனப் புலவரும், கூழங்கைத் தம்பிரானிடம் ஒருங்கு கல்வி கற்றவர்கள். கி. பி. 1805 ஆம் ஆண்டில் வைத்தியலிங்கச் செட்டியார் தம் ஆஸ்திகளைப் பற்றிய மரணசாதனப் பத்திரம் பிறப்பித்தார் என்பது அப்பத்திர வாயிலாகவே இன்றும் நாமறியக் கிடக்கின்றது. அங்ஙனம் பத்திரம் பிறப்பித்தபின் செட்டியார் பெரும் பொருள் எடுத்துக் கொண்டு வேண்டிய பரிசனங்களுடன் தம் தோழராகிய மயில்வாகனப் புலவரையும் அழைத்துக்கொண்டு காசிக்குப் பிரயாணமானுர். வழியிலும் காசிப் பதியிலும் பல தருமத்தாபனங்கள் செய்து, அங்குச் சிறிது காலத்திற் செட்டியார் காலகதியடைய, மயில்வாகனப் புலவர் மீண்டும் யாழ்ப்பாணம் வந்து, மேலும் சிலகாலம் வாழ்ந்திருந்தனர்". சதாசிவ ஐயர் அவர்களது இக்குறிப்பின்படியும், மயில்வாகனப் புலவர் காலம் பதினெட்டாம் நூற்றுண்டென்று கொள்வதில் இடர்ப்பாடெதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. அந்நூற்றுண்டின் முற்பகுதியிலா, நடுப்பகுதியிலா அன்றிப் பிற்பகு

---

1. V. Coomaraswamy B. A.—
A peep into Dutch Archives in Ceylon — Hindu Organ of 3.2.1936.

தியிலா அவர் வாழ்ந்தார் என்பதிற்முன் கருத்து வேற்றுமை கள் காணப்படுகின்றன.

கைலாயமாலை, வையாபாடல், பரராசசேகரனுலா, இராசமுறை என்ற நூல்களை மயில்வாகனப் புலவர் தாமெழுதிய யாழ்ப்பாண வைபவமாலைக்கு ஆதாரமாகக் கொண்டாரென்பது, 'உரராசர்' என்று தொடங்கும் அந்நூற் சிறப்புப் பாயிரச் செய்யுளால் நன்கு புலனுகும். பதினெட்டாம் நூற்ருண்டில் வையாபாடல் ஆதாரநூலாகக் கொள்ளத் தக்க அளவுக்குச் சிறப்புப்பெற்றிருந்தது என்பது இதனுல் அறியக் கிடக்கின்றது. ஆகவே, வையாபாடல் பதினெட்டாம் நூற்ருண்டிலோ அதற்கு முன்னரோ இயற்றப்பட்டதாதல் வேண்டும்.

(ஆ) அகச்சான்று

இந்நூலின் காலத்தை மேலும் நுணுகி ஆய்வதற்கு இதன் இறுதிச் செய்யுட்கள் சில, அகச்சான்ருக உதவுகின்றன.

'எந்நாளு மிம்முறையே யாவரையும் வாழ்வீரென் றிருத்தி யங்கண்
மன்னுன விளவலெனுஞ் சங்கிலியை வாவெட்டி சாரச் செய்து
முன்னேர்க்குப் புரிபூசை நிதந்தெரிசித் தேமுன்ளி வளையா மூரில்
மன்னுன விரவிகுலப் பரராச சேகரனும் வாழ்ந்தா னன்றே.'

(வையா 99)

என்ற பாடலிலிருந்து இந்நூலியற்றப்பட்டபோது, சங்கிலி என்பான் வாவெட்டியில்[1] இருந்தானென்றும், அவன் தமையனுகிய பரராசசேகரன் முள்ளியவளையில் வாழ்ந்தானென்றும் தெரிய வருகிறது.

'அந்தவனை வோர்களையு மன்னவர்கள் மன்னவன்பார்த் தன்பி னேடு
கந்தமலி தாரிளவல் செகராச சேகரனைக் கருணை கூர
இந்தயாழ்ப் பாணமதி லிருக்கவென்றே சித்திரவே லரையு மீந்து
வந்துமுள்ளி மாநகரிற் கோட்டையும்நற் சினகரமும் வகுப்பித் தானுல்.

என்ற தொண்ணூற்ருருவது செய்யுளிற் பரராசசேகரன் தன் தம்பியாகிய செகராசசேகரனை யாழ்ப்பாணத்திலிருத்தி

---

1. இது முல்லைத்தீவுப் பகுதியில் உள்ளது.

விட்டுத் தான் முள்ளியவளைக்குச் சென்று அங்கு கோட்டையும் கோயிலும் வகுப்பித்தான் என்று சொல்லப்படுகிறது. எனவே, இங்கு செகராசசேகரனெனக் கூறப்படுபவன் சங்கிலியின் சகோதரனும், பரராசசிங்கனின் இளவலுமாவானெனத் தெரிகிறது. இச்செய்யுளில், 'இந்த யாழ்ப்பாண மதிலிருக்க வென்றே......' என்று குறிப்பிடுவதிலிருந்து, இந்நூலாசிரியன் யாழ்ப்பாணத்திலே சங்கிலியின் சகோதரனாகிய செகராசசேகரன் ஆட்சி செய்தபோது இந்நூலை அங்கிருந்தெழுதினனென்று கொள்ள இடமுண்டு.

யாழ்ப்பாணத்திலே செகராசசேகரனையும், வாவெட்டியிலே சங்கிலியையும் அரசு பரிபாலிக்க வைத்து, அவர்கள் தமையனான பரராசசேகரன் முள்ளியவளையிலிருந்து பேரரசோச்சி வந்தானென்றும், தன் தம்பியர்கள் யாழ்ப்பாணத்திலும் வாவெட்டியிலும் எவ்வாறு பரிபாலனம் நடத்தினர்களென மாதந்தோறும் ஆங்காங்கு சென்று கண்காணித்து வந்தானென்றும் இந்நூலின் நூறாவது செய்யுளிலிருந்தறிய முடிகிறது. நூற்றோராம் நூற்றிரண்டாம் செய்யுட்களிலே, அன்ன நாள்வரை யானதிக் கதை யென'வும் சொல்லப்படுகிறது. வையாபாடல் கூறும் வரலாறு அத்துடன் முடிவடைகிறது. சங்கிலி யாழ்ப்பாணத்தரசனான கதை இங்கு சொல்லப்படவில்லை. எனவே, பரராசசேகரன் இறந்தபின் அவன் சகோதரனான செகராசசேகரன் யாழ்ப்பாணத்திலரசோச்சுகையில் இந்நூலெழுதப்பட்டதென்பது தெளிவாகிறது.

இங்கு குறிக்கப்பட்ட பரராசசேகரனும் செகராசசேகரனும், கி. பி. 1440ஆம் ஆண்டளவில் யாழ்ப்பாண அரசனான கனகசூரியசிங்கையாரியனின் புதல்வர்கள் என யாழ்ப்பாண வைபவமாலை கூறும். அவ்வாறாயின், சங்கிலியும் அவன் புதல்வர்களுள் ஒருவனாதல் வேண்டும். அதற்கு மாறாக யாழ்ப்பாண வைபவமாலை இப்பரராசசேகரனின் புதல்வர் மூவரில் ஒருவனே சங்கிலி என்று கூறும். வையாபாடலின்படி அக்கூற்றுப் பொருந்தாமை புலனாகும். பரராசசேகரனென்ற மன்னனொருவனுக்கு முன்னரசாண்ட கனகசூரியசிங்கையாரியனே செகராசசேகரன் என்ற சிங்காசனப்பெயர் பெற்றவனாதல் வேண்டும். ஏனெனில் 'பரராசசேகரன் செகராசசேகரன்

என்பன யாழ்ப்பாணத்தரசர் ஒருவர்பின் ஒருவராய் இட்டுக்கொண்ட சிங்காசனப் பெயர்களாகும்[1]'. என யாழ்ப்பாண வைபவமாலைப் பதிப்பாசிரியருளொருவரான முதலியார் குல. சபாநாதனும், யாழ்ப்பாண வைபவ விமர்சன ஆசிரியர் நல்லூர் சுவாமி ஞானப்பிரகாசரும்[2] நன்கெடுத்துக் காட்டியுள்ளனர். சுவாமி ஞானப்பிரகாசரின் கணக்குப்படி, கனகசூரியசிங்கையாரியன் ஆறும் செகராசசேகரனுவான்[3].

எனவே, அவனது மூத்த மகன் ஆறும் பரராசசேகரனுகவும், அவனைத் தொடர்ந்து அரசுரிமை பெற்ற இரண்டாம் மகன் ஏழாம் செகராசசேகரனுகவும் விளங்கியிருக்க வேண்டும். இவனைக் கொன்றே சங்கிலி அரசுரிமையைக் கவர்ந்தானென்பது சரித்திரம். எனவே, சங்கிலி ஏழாம் பரராசசேகரனுய் விளங்கியிருத்தல் வேண்டும். இதற்கு மாருகச் சங்கிலியை ஏழாம் செகராசசேகரன் என்று சுவாமி

---

1. யாழ்ப்பாண வைபவமாலை —முதலியார் குல சபாநாதன் பதிப்பு — 1953 — பக்கம். 46

2. யாழ்ப்பாண வைபவ விமர்சனம் — நல்லூர் சுவாமி ஞானப்பிரகாசர் —1928 — பக்கம். 80

3.

| | சிங்காசனப் பெயர் — | பி. கி. |
|---|---|---|
| (1) சாலிங்க ஆரியச்சக்கரவர்த்தி | —செகராசசேகரன் | i 1242 |
| (2) குலசேகர சிங்கையாரியன் | —பரராசசேகரன் | i |
| (3) குலோத்துங்க சிங்கையாரியன் | —செகராசசேகரன் | ii |
| (4) விக்கிரம சிங்கையாரியன் | —பரராசசேகரன் | ii |
| (5) வரோதய சிங்கையாரியன் | —செகராசசேகரன் | iii |
| (6) மார்த்தாண்ட சிங்கையாரியன் | —பரராசசேகரன் | iii |
| (7) குணபூஷண சிங்கையாரியன் | —செகராசசேகரன் | iv |
| (8) விரோதய சிங்கையாரியன் | —பரராசசேகரன் | iv 1344 |
| (9) சயவீர சிங்கையாரியன் | —செகராசசேகரன் | v 1380 |
| (10) குணவீர சிங்கையாரியன் | —பரராசசேகரன் | v 1414 |
| (11) கனகசூரிய சிங்கையாரியன் | —செகராசசேகரன் | vi |

(இந்நூலிற் குறிக்கப்படும் யாழ்ப்பாண அரசர் ஆண்டுக் காலங்கள், நல்லூர் சுவாமி ஞானப்பிரகாசர் எழுதிய 'யாழ்ப்பாண வைபவ விமர்சனம்' என்ற நூலிற் கண்டவாறு குறிக்கப்பட்டிருக்கின்றன.)

ஞானப்பிரகாசர் கூறியிருப்பது,[1] வையாபாடலிலுள்ள தொண்ணூற்ருரும் தொண்ணூற்ருென்பதாம் நூரும் செய்யுட்களின்கருத்தைக் கண்டுகொள்ளாமையாற் போலும்.

இவ்வாய்வின் பயனுக. இந்நூலாசிரியன் காலம் ஏழாம் செகராசசேகரன் காலமெனவும், ஏழாம் செகராசசேகரன் என்பான் சங்கிலிக்கு முன் யாழ்ப்பாணத்தி லரசோச்சிய மன்னனெனவும், அவன் சங்கிலியின் சகோதரனெனவும் கண்டோம். சங்கிலி மன்னன் யாழ்ப்பாண அரசு கைக்கொண்ட ஆண்டு கி.பி.1519 எனச் சுவாமி ஞானப்பிரகாசர் கணக்கிட்டுக் கூறுவர்[2]. எனவே, சங்கிலி மன்னனுக்கு முன் யாழ்ப்பாணத்தில் அரசாண்ட அவன் சகோதரனுன ஏழாம் செகராசசேகரன் கால இறுதி எல்லையும் அதுவேயெனக் கொள்ளக்கிடக்கிறது. ஆரும் பரராசசேகரனும் அவன் தம்பியாகிய ஏழாம் செகராசசேகரனும் ஒருவர்பின் ஞெருவராக யாழ்ப்பாண அரசுக் குரியவரானவர்களென்றும், அவர்கள் கனகசூரிய சிங்கையாரியன் புதல்வர்களென்றுங் கண்டோம்

கனகசூரியசிங்கையாரியனேச் செண்பகப் பெருமாள் (சப்புமல் குமாரய) என்ற சிங்களநாட்டு வீரன் கி. பி. 1450 ஆம் ஆண்டிலே தோற்கடித்து யாழ்ப்பாணத்திற் பதினேழு ஆண்டுகள் ஆட்சி நடத்தினுன்; கி. பி. 1467 இற் கனகசூரிய சிங்கையாரியன் மீண்டும் யாழ்ப்பாண அரசைக் கைப்பற்றினுன் என்பது வரலாறு. ஆகவே, கி. பி. 1467 ஆம் ஆண்டுக்கும் கி. பி. 1519 ஆம் ஆண்டுக்குமிடைப்பட்ட காலத்திற் கனகசூரியசிங்கையாரியனும் அவன் புதல்வர்களாய ஆரும் பரராசசேகரனும் ஏழாம் செகராசசேகரனும் ஒருவர் பின்ஞெருவராக ஆட்சி செலுத்தினர் என்று கூறல் பொருந்தும். இவ்வைம்பத்திரண்டாண்டுக் காலத்தின் இறுதிப்பகுதியே ஏழாம் செகராசசேகரன் ஆட்சிக் காலமாகும். அது பதினைந்தாம் நூற்ருண்டின் கடைசிப்பகுதியிலோ அன்றிப் பதினும் நூற்ருண்டின் தொடக்கத்திலோ ஆரம்பித்திருக்கலாம். ஆகவே, அவன்காலப் புலவனும் இந் நூலாசிரியனுமாகிய

---

1. யாழ்ப்பாண வைபவ விமர்சனம் —
நல்லூர் சுவாமி ஞானப்பிரகாசர் 1928 — பக்கம்—113

2. யாழ்ப்பாண வைபவ விமர்சனம் —
நல்லூர் சுவாமி ஞானப்பிரகாசர் 1928 — பக்கம்......114

வையாபுரி ஐயர் காலமும் பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதிக்கும் பதினாறும் நூற்றாண்டின் முற்பகுதிக்குமிடைப்பட்டதெனல் சாலும்.

இந்நூலின் 89 ஆம், 91 ஆம் செய்யுட்களின்படி, ஆறும் பரராசசேகரனும் 'தொண்டை மண்டலந்தனி லுகந்தருளும் கன்னதேவரு'ம் சமகாலத்தவராவர். கன்னதேவர் என்பது கி. பி. 1509 முதல் 1530 வரை அரசாண்ட விஜயநகர மன்னனாய கிருஷ்ணதேவராயரைக் குறிக்கும் என்பர். எனவே, ஆறும் பரராசசேகரன் கி. பி. 1509 ஆம் ஆண்டு வரையாவது ஆட்சி செலுத்தியிருக்க வேண்டும். அதனால், ஏழாம் செகராசசேகரன் ஆட்சிக்காலம் கி. பி. 1509 ஆம் ஆண்டுக்கும் 1519 ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்டதாதல் வேண்டும் என்பது தெளிவாகிறது. எனவே, ஏழாம் செகராசசேகரன் காலப் புலவனாய இந்நூலாசிரியர் இக்கால கட்டத்திலேயே இந்த நூலைச் செய்திருக்க வேண்டும்.

இடைச்செருகல்.

இந்நூற் கதை ஆறும் பரராசசேகரனது மரணத்தோடு முடிகிறதென வையாபாடல் 102ஆம் செய்யுள் குறித்துள்ளது. அஃதவ்வாறாக 33ஆம் செய்யுளிற் பறங்கியர் பற்றிக் குறிப்பிடப்படுவது பொருந்தாது. ஆறும் செகராசசேகரன் காலத்திலே பறங்கியர் இலங்கையின் வடபகுதியை அரசாளவில்லை. எனவே, வையாபாடல் 33ஆம் செய்யுள், 'சந்திரசேகரன் கோயில்' பற்றி இந்நூலிடைப் புகுத்துவதற்காக இடைச்செருகலாக வைக்கப்பட்டிருத்தல் வேண்டும். அன்றேல் அச்செய்யுளின் இறுதியடியில் ஏதோ தவறேற்பட்டிருக்க வேண்டும். அதனை ஆதாரமாக வைத்துக்கொண்டு இந்நூல் பறங்கியர் காலத்துக்குப் பின்னரே ஆக்கப்பட்டிருத்தல் வேண்டுமெனச் சுவாமி ஞானப்பிரகாசர்போன்றோர் கொள்ளும் கருத்தை யேற்பின், 'இலங்கையின் மண்டலத்தோர்தங் காதை' சொல்ல வந்த இவ்வாசிரியர், அதனை ஆறும் பரராசசேகரனது காலத்துடன் முடித்துச் சங்கிலி மன்னனது ஆட்சிபற்றிய பல செய்திகளையும், பறங்கியர் யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றி யரசாண்ட செய்திகளையுங் கூறுதொழிந்தமை விளக்கிக்கொள்ள முடியாததொன்றாய்விடும்.

கண்ணகிக்குக் காற்சிலம்பு செய்யும் பொருட்டு நாகமணி வேண்டி மீகாமன் இலங்கை சென்ற சம்பவம் 52ஆம் செய்

யுள் முதல் 54ஆம் செய்யுள் வரை கூறப்படுகிறது. இச் செய்யுட்கள் மூலக்கதைக்குத் தொடர்பற்ற சம்பவமுடை யன வாகையால், அவை இடைச் செருகலாயிருத்தல் கூடு மெனக் கருத இடமுண்டு. எனினும், மட்டக்களப்பிலும், விடத்தற்றீவிலு மேற்பட்ட குடியேற்றம் பற்றிக் கூறுவதற் காகவே அச்சம்பவ மிங்கு கையாளப்பட்டிருக்கிறதெனச் சமாதானங் கூறினுமமையும்.

## நூற் பெயர்

'வையாபாடல்' என்று இந்நூலுக்கு அதனாசிரியர் பெய ரிட்டிருப்பாரெனல் சந்தேகத்திற்குரியதாகும். ஆக்கியோன் பெயர் சொல்லுஞ் செய்யுளில், இந்நூல் பற்றிய குறிப்பு 'இலங்கை மண்டலத்தோர் தங்காதை' என்றிடப்பட்டிருக் கிறது. அதனால், இந்நூலின் பெயர் 'இலங்கை மண்டலக் காதை' என்றிருந்ததாகக் கருதலாம். இதற்காதாரமாகக் காப்புச் செய்யுளில் 'இலங்கையின் சீரை யோதிட'என்றும், இரண்டாவது செய்யுளில், 'நாவிலங்கையின் நன்மொழி யுரைத்திட' என்றுங் குறிப்பிடப்பட்டிருத்தல் நோக்கற் பாலது.

ஆசிரியன் பெயரால் அவன் நூல் வழங்கப்படும் மரபும் உண்டு. ஆயின், அவ்வகைப் பெயரீட்டுக்குரிய ஆதார மெது வும் இந்நூலின்கண் பெறப்படவில்லை. காலப்போக்கில் நூலின் பெயர் மறைந்துபோகப் பின்னர் ஆசிரியன் பெய ரால் இந்நூல் வழங்கப்பட்டதாதல் கூடும்.

## நூலின் நோக்கம்

இந்நூலின் நோக்கம் அதன்பாலுள்ள மூன்றும் செய் யுளாலே தெரிய வருகிறது.

'இலங்கை மாநகர் அரசியற் றிடுமர சன்றன்
குலங்க ளானதும், குடிகள்வந் திடுமுறை தானும்
தலங்கள் மீதினி லிராட்சதர் தமையடு திறனுந்
நலங்க ளாகுநேர் நாடர சாகிவந் ததுவும். (வையா—3)

இலங்கையை அரசாண்டமன்னன் குலங்கள் பற்றியும், அங்கே ஆதியில் இருந்த இராட்சதர்களை அவ்வரசர்கள் தோற்கடித்து நாட்டிலே நல்ல ஆட்சியை நிறுவிவந்த சம் பவங்கள் பற்றியும் எடுத்துரைப்பதே இந்நூலின் நோக்

கம் என்ற பொருளில் அச்செய்யுள் அமைந்துள்ளது. அந் நோக்கம் இந்நூலில் எந்த அளவுக்கு நிறைவேறியுள்ளது என்பதை ஆராய்வோம்.

தம் காலத்திலேயே இலங்கையை அரசாண்ட மன்னனது குலங்களைப் பற்றி விரித்துக் கூறுவது இந்நூலாசிரியனது முதல் நோக்கமாகக் குறிக்கப்பட்டுள்ளது. அப்பொழுது யாழ்ப்பாண மன்னனாக விளங்கிய ஏழாம் செகராசசேகரன் இலங்கை முழுவதற்கும் அரசனாக விளங்கினானென்பதற்கு ஆதாரமில்லை. அவனைச் சிறப்பித்துச் சொல்வதற்காக ஆசிரியர் 'இலங்கை மாநகர் அரசியற்றிடு மரசன்' என்று கூறியிருக்கலாம். அவனது குலத்தை எடுத்துக் காட்டுவதற்காக ஆதியில் யாழ்ப்பாணத்தை அரசாண்ட அவன் மூதாதையரான 'கோளுறு கரத்துக் குரிசில்' (கூழங்கைச் சக்கரவர்த்தி) கோத்திரத்தை மட்டும் விரித்துரைக்கிறார். கூழங்கைச் சக்கரவர்த்திக்கும் ஆறும் பரராசசேகரனுக்கு மிடைப்பட்ட மன்னர் பற்றி ஆசிரியர் குறிப்பிடவில்லை. கூழங்கைச் சக்கரவர்த்தி காலந்தொட்டு இந்தியாவிலிருந்து குடிகள் வடஇலங்கையிற் குடியேறிய வரலாறு விரித்துரைக்கப் பட்டிருக்கிறது. அவ்வாறு முதற் குடியேறியவர்கள், இராம இராவண யுத்தத்தின் பின் இலங்கையிலே எஞ்சியிருந்த இராட்சதருடன் சமர் விளைத்தமையும், பின்னர் நாட்டில் நல்லாட்சி ஏற்பட்டுவந்தமையும் கூறப்பட்டிருக்கின்றன. எனவே இந்நூலின் நோக்கம் நூலின்கண் பெருமளவு நிறைவெய்தியிருக்கிறது என்றே கூறுதல் வேண்டும். ஆனால், நுதலிய பொருள், வரலாற்று முறையில் எவ்வாறமைகிற தென்பது ஆராயத்தக்கது.

நூலின்கண் தாம் சொல்லும் பொருளுக்கு ஆதார மென்னவென்பதை ஆசிரியர் முதற்கண் சொல்லிவைக்கிறார். அகத்திய முனிவரின் பேரனான சுபதிட்டு முனிவர் சொல்லி வைத்த கதையை, அவர் கூற்றைத் தழுவித் தான் புகல்வதாக ஆசிரியர் கூறுகிறார்.

வையாபாடலைப் பதினெட்டாம் நூற்றாண்டளவிலே வசனத்திலெழுதிய சிலர் இக்கருத்தைத் திரித்துச் சுபதிட்டு முனிவர் யாழ்ப்பாணம் சென்று ஆறும் பரராசசேகர மன்னனைக் கண்டு, அவன் அரசாட்சி விரைவிலே அழிந்தொழியுமென்றும் அவனரசைப் பறங்கியர், ஒல்லாந்தர், ஆங்கிலேயர் ஆகியோர் முறையே கைக்கொள்வர் என்றும்

தீர்க்கதரிசனங் கூறினரென எழுதியிருப்பது நகைப்புக்கிடமான தொன்றும். வருங்கால சம்பவங்களை முனிவர் முன்னரே சொல்லிவைத்தாரென ஆங்கிலேயர் இலங்கையை அரசாண்ட காலத்திலே யாரோ இடைச்செருகலாகவும் முன்பின் முரணுகவும் அப்பகுதியினை எழுதியிருத்தல் வேண்டும். இவ்விடைச்செருகல் கோணேசர் கல்வெட்டிலும் புகுத்தப்பட்டிருப்பது நோக்கற்பாலது. முதற்சங்க காலத்திலிருந்த அகத்திய முனிவரின் பேரன், கி. பி. பதினைந்தாம் பதினறும் நூற்றாண்டிலிருந்த ஆறும் பரராசசேகரனிடம் சென்றானெனல் பொருந்தாக் கூற்றே.

சுபதிட்டு முனிவர் காலம் வரையுள்ள வரலாற்றுப்பகுதியை அம்முனிவர் கூறி வைத்திருக்கலாம். அதனைத் தொடர்ந்து இந்நூலாசிரியர் தன்காலம் வரையுள்ள வரலாற்றினைக் கூறியிருக்கலாம் என்று கொள்ளுவதே பொருத்தமாகும்.

## நூற் பொருள்

வையாபாடல் என்ற இந்நூல் 'இலங்கை யரசன் குலங்களையும் குடிகள் வந்த முறையினையும்' கூற எழுந்த ஒன்றுகையால், நூலாசிரியன் காலத்தரசாண்ட பரராசசேகரன், செகராசசேகரன் குலத்தைக் காட்டுமுகத்தால் யாழ்ப்பாணத்து முதலரசனுன கூழங்கைச் சக்கரவர்த்தியின் குலத்தையும், அவன் மைத்துனியாய மாருதப்பிரவையின் வரவையும் முதலிற் கூறிப் பின் வன்னியர் குடியேற்றம் பற்றிய செய்திகளையும், அவர்கள் அடங்காப்பற்றில் ஆதிக்குடிகளை அடக்கி ஆண்ட சம்பவங்களையும் விரித்துரைக்கும்.

வன்னியர்கள் வரவைத் தொடர்ந்து பல்வேறு குடிகள் இந்தியா சீனு, துருக்கி ஆகிய நாடுகளிலிருந்து வந்தமையும், அவர்கள் மூலமாகப் பல்வகைத் தெய்வங்கள் கொண்டுவரப்பட்டமையும் இந்நூலிற் காணலாம்.

இறுதியாகப் பரராசசேகரன் ஆட்சிக் காலத்தில் நடந்த சம்பவங்களும் அவன் மரணமுங் கூறியமைகிறது இந்நூல். இதன் அமைப்பையும் பொருளையும் நோக்குமிடத்து, இது ஒரு வரலாற்று நூல் என்பது தெரிகிறது. இலக்கிய நோக்குடன் இது செய்யப்படவில்லையென்பது, இச்செய்யுட்களிற் கற்பனை வளமோ, வர்ணனை நயமோ, அணி அமைப்போ, சுதைச்செறிவோ, காவியச் சுவையோ எதுவுமில்லாமை காட்டிவிடும்.

வரலாற்று முறையில், இங்கு கூறப்பட்டிருக்குஞ் சம்பவங்களும் ஆண்டுக் கணக்குகளும் ஆதாரபூர்வமானவையா என்பது ஆராயப்பட வேண்டியதே.

இராவணன் இறந்தபின் இலங்கை மன்னனாய் இராமனால் முடி சூட்டப்பெற்ற விபீஷணன் முன்னிலையில் யாழ் வாசிப்பவன் ஒருவன், இலங்கையின் வடகடற்கரையிலே தனக்குக் கிடைத்த மணற்றிடற்காட்டைத் திருத்தி நற்பயிர் செய்து சோலையாக்கி, ஆங்கு மண்டப மமைத்துப் பின் தசரதன் மைத்துனனான குல(க்)கேது என்பவனது மகன் கோளுறு கரத்துக் குரிசி'லைக் கூட்டி வந்து, சக்கரவர்த்திப் 'பட்டஞ் சூட்டி, அந்நாட்டிற்கு யாழ்ப்பாணமெனப் பெயருமிட்டு அதனை அரசாள வைத்தான் என்றும், அப்பொழுது கலியுக ஆண்டு 3000 ஆகியிருந்தது என்றும் இந்நூல் கூறும். இதுவே இதன் முதற் சம்பவமும் ஆண்டுக் குறிப்புமாகும்.

கலியுக ஆண்டு 3000 என்பது, கி. மு. 101 க்குச் சமமானதாகும். அக்காலத்தில் யாழ்ப்பாணத்திலே தமிழரசிருந்ததென்பதனையும், யாழ்ப்பாணம் என்ற பெயர் வையா பாடலிற் கூறியுள்ள யாழ்வாசிப்பவன் காரணமாகவே எழுந்ததென்பதனையும். அக்கதை வையாபாடலில் இடைச்செருகலாகச் சேர்க்கப்பட்டதன்றென்பதனையும், இதிற் கூறப்பட்டுள்ள கண்ணகிபற்றிய ஆண்டுக்கணக்கு ஆதாரபூர்வமானதே என்பதனையும் நிறுவி, 1966 ஆம் ஆண்டு கோலாலம்பூரில் நடைபெற்ற முதலாம் உலகத் தமிழ் ஆராய்ச்சி மகாநாட்டில் 'A Critical Study of Tamil documents pertaining to the History of Jaffna' என்ற தலைப்பில் இப் பதிப்பாசிரியரால் எழுதி வாசிக்கப்பட்ட ஆய்வுக் கட்டுரை[1], வையாபாடல் ஆதாரமற்ற செய்திகள் கொண்ட நூலன்றென்பதைக்காட்டும்.

'கோளுறுகரத்துக் குரிசி'லின் (கூளங்கைச் சக்கரவர்த்தியின்) மாமனான உக்கிரசோழனது மக்கள் சிங்ககேதென்பவனும் மாருதப்பிரவை என்பவளும் இலங்கை சேர்ந்தனரென்றும், மாருதப்பிரவைக்கிருந்த குதிரைமுக நோய்[2] கீரிமலைத் தீர்த்தத்திலாட மாறிற்றென்றும், அதன்பின் அவள்

---

1. Proceedings of the first International Conference Seminar of Tamil Studies-1966, Vol.I, Page475.

2. குதிரைமுக மென்பது முழந்தாளைக் குறிக்கும்; குதிரைமுக நோய் முழந்தாளி லேற்படும் ஒரு நோய் போலும்;

கதிரையம்பதியிற் சென்று, 'அரன் மகவினை' வணங்கி வருங் கால், உக்கிரசிங்கசேனன் அவளை மணந்து வாவெட்டி மலை யில் மண்டப மியற்றி அங்கிருந்தரசாட்சி செய்தானென்றும், அவர்களுக்குப் பிறந்த 'சிங்க மன்னவன்', தன் மாமனுய காவலன் சிங்ககேதென்பவனிடம் பெண் கேட்டனுப்ப, அவனும் சமதுதி என்ற தன் மகளை அறுபது வன்னியர் புடை சூழ அனுப்பிவைத்தானென்றும் வையாபாடல் கூறும்.

இக்கதையினைச் சுவாமி ஞானப்பிரகாசர் ஆராய்ந்து, இங்கு கூறப்படும் உக்கிரசிங்கசேனனே குளக்கோட்டு மன் னன் எனவும், மாருதப் பிரவையே ஆடக சவுந்தரி யெனவுங் கருதுவர்[1]. மட்டக்களப்பு மான்மியத்தில் ஆடக சவுந்தரியின் கதை கூறப்படுமிடத்து, அவள் கணவன் மகாசேனன் எனவும் அவன் 'தட்சணுகயிலையில் சிவாலயங்களை நேர்பண்ணின' னெனவும், அவர்கள் புத்திரன் சிங்ககுமாரனெனவும் விவரிக் கப்பட்டிருக்கிறது[2]. கோணேசர் கல்வெட்டிலே, குளக் கோட்டிராமன் திரிகோணமலையிற் கோயிலுங் குளமுங் கட்டு வித்து, அவற்றிற்கான கடமைகள் செய்வித்தற்காக வன்னி யரை ஆங்கு குடியேற்றுவித்தானென்று சொல்லப்படுகிறது[3]. கைலாய மாலை என்ற நூலில், 'மன்னர் மன்னனெனுஞ் சோழன் மகளொருத்தி' கடலருவித் தீர்த்தமாடித் தன் நோய் தீர்க்க வந்தவிடத்துக், 'கதிரைமலை வாழு மடங்கன் முகத்தாய்ந்த நராகத்தடலேறு' 'அவளைக் கைப்பிடித்து, 'வரசிங்கராயன்' எனும் புதல்வனைப் பெற்றனன் என்று சொல்லப்படுகிறது[4].

இக்கதைகள் அனைத்திலும் சில பொதுத் தன்மைகள் இருத்தலை அவதானிக்கலாம். 'சிங்கமன்னவன்' என்று வையா பாடலிற் கூறப்படுபவனே, 'சிங்ககுமாரனென மட்டக் களப்பு மான்மியத்திலும், 'வரசிங்கராய'னெனக் கைலாய மாலையிலும் 'வீரவரராய சிங்கம்' என வையா பாடல் வசனத் திலும் சொல்லப்படுகிருன். உக்கிரசிங்கனென யாழ்ப் பாண வைபவ மாலையிலும், உக்கிரசிங்க சேனனென

---

1. சுவாமி ஞானப்பிரகாசர், யாழ்ப்பபாண வைபவ விமரி சனம் —1928— பக்கம் 9.
2. மட்டக்களப்பு மான்மியம் — F. X. C. நடராசா பதிப்பு —1962— பக்கம் 32—35
3. கோணேசர் கல்வெட்டு—செய்யுள் 5—14.
4. கைலாயமாலை — சே. வெ. ஜம்புலிங்கம்பிள்ளை பதிப்பு— 1939—பக்கம் 2-3

வையா பாடலிலும், மகாசேனனென மட்டக்களப்பு மான்மியத்திலும், உக்கிரசேன சிங்கமென வையா பாடல் வசனத்திலும், குளக்கோட்டிராமனெனக் கோணேசர் கல்வெட்டிலும் கூறப்படுபவன் ஒருவனேயாகலாம். இவனே முதலில் வன்னியர்களை இலங்கையிற் குடியேற்றினுனெனக் கோணேசர் கல்வெட்டுக் கூறும். ஆனல் வையா பாடல், அவன் மகனுன, சிங்கமன்னவன்' அறுபது வன்னியர்களை அடங்காப்பற்றில் முதலிலே குடியேற்றினுனென்னும்.

## வன்னியர் குடியேற்றத்தின் காலம்

கூழங்கையாரியச் சக்கரவர்த்தியின் காலம் கி. மு. 101 எனக் கண்டோம். அவனது மாமன் மகளான மாருதப் பிரவை[1] காலமும் அதனையண்டியேயிருத்தல் வேண்டும். ஒரு சமயம் கி.மு. முதலாம் நூற்ருண்டின் முற்பகுதியாதல் கூடும்.

அவளின் மகனுன 'சிங்கமன்னவன் காலம், கி.மு.முதலாம் நூற்ருண்டின் நடுப்பகுதியாகலாம். வையா பாடலின்படி இவனே அறுபது வன்னியர்களை அடங்காப்பற்றிற் குடியேற்றியவனுவான். எனவே, வன்னியர் இலங்கையிற் குடியேறிய காலம் கி. மு. 50ஆம் ஆண்டு வரையிலென வையாபாடல் வாயிலாகக் கொள்ளக் கிடக்கிறது.

மட்டக்களப்பு மான்மியத்தில் ஆடகசவுந்தரியின் அரசுகாலம் கலிபிறந் மூவாயிரத்தொரு நூற்றெண்பதாம் ஆண்டுமுதல் நாற்பது வருடங்களெனச் சொல்லப்படுகிறது. அது கி. பி. 79 முதல் கி. பி. 119 வரையுள்ள ஆண்டுகளுக்குச் சமமானது. இவளது கணவனுன மகாசேனனே குளக்கோட்டு மன்னன் என்று கருதப்படுவதால், அவன் வன்னியரை இலங்கையிற் குடியேற்றுவித்த காலம் இம்மான்மியத்தின்படி கி. பி. 100வரையிலெனக் கொள்ளலாம்.

இவ்விரண்டு கணிப்புகளுக்குமிடையில் 150 ஆண்டுகளே வித்தியாசமாக உள்ளன என்பது கவனிக்கத்தக்கது.

---

1. இவள் பெயர் மாருதப்பிரவல்லி என யாழ்ப்பாண வைபவமாலை கூறும். சுவாமி ஞானப்பிரகாசர் 'மாருதப் பிரவாக வல்லி' என்பர். மாருதப்புரவீகவல்லி யென்பாருமுளர்.

## வன்னியரின் ஆரம்ப வரலாறு.

இலங்கைக்கு வன்னியர் வந்த வரலாறு பற்றிய குறிப்புக்களே வையாபாடலிற் பெரிதுங் காணப்படுகின்றன. கோணேசர் கல்வெட்டிலும் அவ்வகைக் குறிப்புக்களை அதிகமாகக் காணலாம், இரு நூல்களிலும் கூறப்படும் வன்னியர் வருகை இருவேறு காரணங்களுக்காக ஏற்பட்டனவாகக் காண்கிறேம். அவ் வன்னியர்கள் தென்னிந்தியப் பகுதிகளிலிருந்தே இலங்கைக்கு வந்தனரென இரு நூல்களும் கூறும்.

தற்பொழுது தமிழ் நாட்டிலே சேலம் முதற் புதுச்சேரிவரை வன்னி குலத்தினர் பரந்து வாழ்கின்றுர்கள் என்று சொல்லப்படுகிறது. அவர்கள் யார், எவ்வாறு அவர்கள் அங்கெல்லாம் பரந்தனரீ என்பன பற்றிப் பல புராணக்கதைகளும் ஐதீகங்களும் உள.

வன்னியர்கள் அக்கினி குலத்தவரீ என்பது புராணக்கதை. இது 'வஹ்நி' என்ற வடசொல்லின் பொருளாய அக்கினி என்ற கருத்தைக் கொண்டெழுந்ததாகலாம். 'சிலை எழுபது' என்னும் நூல் அவர் குல 'மான்மியத்தை' அவ்வாறு கூறும். வன்னியருக்குரிய சின்னம் சிலை(வில்)ஆகும். கல்லாடத்தில் வன்னியருக்குப் பன்றியுற்பத்தி கூறப்பட்டுள்ளது.[1]

"இந்நவீன உற்பத்தி வெறுங் கற்பனையன்று, உண்மைச் சம்பவமொன்று பொதிந்த உருவகமே'' என்பர் திரு. வி. குமாரசுவாமி அவர்கள்[2]. "வன்னியர்கள் பலர் பன்றிக்கொடி யுடையோரான சாளுக்கிய அரசரின்கீழ்ச் சேவகத்துமர்ந்திருந்து, பின் தெற்கின்கண்ணிழிந்து மதுரைப் பாண்டியனுகும் சோமசுந்தரனிடம் பணிவிடை பூண்டனரென்பதும், சோமசுந்தரபாண்டியனே சிவபெருமானுகக் கொள்ளப்பட்டமையின் இப்பெருமான் கார்நிறத்த செங்கட் பிறை எயிற்றுப் பன்றியீன்ற பன்னிரு குட்டிகளை நாற்

---

1\. கருமுகிற் கணிநிறத் தழற்கட் பிறையெயிற்
றரிதரு குட்டி யாயபன் னிரண்டினைச்
செங்கோன் முனையிட் டருளீர் மீதக்கிக்
கொலைகள வென்னும் படாகலை கட்டுத்
திக்குப்பட ராணை வேலி கோலித்
தருமப் பெரும்பாற் குலக்கொடு விளக்கு
நாற்படை வன்னிய ராக்கிய பெருமாலை (கல்லாடம்—
செய்யுள் —37)

2\. Hindu Organ of 8.1.23.

படையிலும் புகழ் சிறந்த வன்னியராக்கினுரெனக் கற்பிக்கப்பட்டது" என்பதும் அன்னாரது கருத்தாகும்.

'வன்னியும் வன்னியர்களும்'[1] என்ற பெயரில் திரு சி. எஸ். நவரத்தினம் அவர்கள் 1960 ஆம் ஆண்டு ஆங்கிலத்தில் வெளியிட்ட நூலில், "வன்னியர்கள் பண்டைக்காலத்திலே தென்னிந்தியாவில் வாழ்ந்து வந்த அக்கினி குலத்தைச் சேர்ந்த ஆரியரல்லாத வகுப்பினராவர். அவர்கள் மறத்தொழில் புரியும் மாவீரர்கள் பரம்பரையிலே தோற்றியவர்கள்; அரச பரம்பரையைச் சார்ந்தவர்கள் அவர்களைத் தென்னிந்திய இராசபுத்திரர்கள் (Rajputs) என்று கூறலாம்" எனக் குறித்துள்ளார்.

வையாபாடல் நூலை 1922ஆம் ஆண்டு பினுங்கில் (Penang) பதிப்பித்த திரு இ. து. சிவானந்தன் அவர்கள் அதன் முகவுரையில் வன்னியர்பற்றிப் பின்வருமாறு கூறுகிருர்:—

"இந்தியாவில், வன்னியச்சாதி, குடியானப்பிள்ளைகளிலொன்ருய் மதிக்கப்பட்டாலும், கள்ளர், மறவர், கணக்கர் அகம்படியாராகிய குடியானப்பிள்ளைகளிலும் பார்க்கக் கீழ்ப்பட்ட சாதியாரென்று மதிக்கப்படுகிருர்கள். ஏனெனில், இவர்கள் பள்ளச்சாதியிலிருந்து தோன்றின ஓர் பிரிவேயாம். இது காரணம் பற்றியே, பள்ளிமுற்றிப் படையாட்சி படையாட்சி முற்றி வன்னியர், வன்னியர் முற்றிக் கவண்டர் ஆனுர்காண்' என்னும் பண்டைவாக்கு இந்நாளிலும் இந்தியாவிலுள்ள எல்லாச் சாதியாராலும் வழங்கப்படுகின்றது.

இந்தியாவிலிவர்கள் கமத்தொழில் செய்யுங் குடியானப்பிள்ளைகளிலொரு வகுப்பினராய் எண்ணப்படுகிருர்கள். கமத்தொழில் செய்பவர்கள் இப்பொழுதும் சுகபெலமுள்ளவர்களானபடியால், ஆதிகாலத் தமிழர்கள் கமத்தொழிலைச் செய்த அச் சாதியிலிருந்தே தங்கள் படைகளுக்கு வேண்டிய போர்வீரர்களைத் தெரிந்தெடுத்தார்கள். படையிற் சேர்ந்த அவர்கள் படையாட்சியாரென் றழைக்கப்பட்டார்கள்.

படையிலுள்ள ஒருவன் அநேக சண்டைகளுக்குப் போய், அதிவீர பராக்கிரமமுள்ளவனுகவும், விவேகியாகவும் காணப்பெறின், அவன் 'வன்னியன்' என்ற உத்தியோகத்திற்

1. Vanni and the Vanniars by C. S, Navaratnam—1960.

குயர்த்தப்படுவான். இப்படியாக 'வன்னியன்' உத்தியோகத்தைப் பெற்றவர்களிலிருந்தே வன்னியச்சாதி தோன்றிற்று: வன்னிய உத்தியோகத்தில் அதிகம் திறமையுடையவர்களை ராசாக்கள் தெரிந்து 'கவண்டன்' என்னுமுத்தியோகத்திலமர்த்தி வந்தார்கள்.

ஓரரசன் தனக்குப்பின்னு லிராச்சியத்தைப் பரிபாலனஞ் செய்யத் தன் வம்மிசத்தில் உரிமையின்றி இறக்குங் காலத்தில், அவன் படையில் முதன்மையாயிருந்த வன்னியர்களவ் விராச்சியத்தைக் கைப்பற்றி யரசு புரிந்தார்கள். இவ்விதமாக வரசுபுரிந்த வன்னிய ராசாக்கள் சத்திரிய வன்னியர்களென வழைக்கப்பட்டார்கள். இவர்களுக்கு இராயரென்றும், பாளயப்பட்டு வன்னியர்கள் என்றும், பள்ளி ராசாக்கள் என்றும் நாமங்களுண்டு."

'வன்னியர்கள் பல்லவர் குலத்தவர் என்றும் ஒரு கொள்கையுண்டு. பல்லவர் ஆதியிலே பழங்குடி மக்களுக்குத் தொல்லை கொடுக்காது காடுகளை வெட்டிக் குடியேறிவந்த காரணத்தால் அவர்கள் காடுவெட்டிகள் எனவும் அக்காலத்தில் வழங்கப்பட்டனர். அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவரும், தமிழ்ப்புலமையுடையவரும், தொண்டை நாட்டரசருமாய்த் திகழ்ந்து, கி. பி. ஏழாம் நூற்றுண்டில் வாழ்ந்த ஐயடிகள் என்னும் பல்லவர்கோன் ஐயடிகள் காடவர்கோன் எனப்படுகிருர். இவரது பெயர் செப்பேடுகளிற் பரமேச்சுர வன்மன் என்றே காணப்படுகிறது. காடவர் என்னும் பெயரின் வடமொழிப் பெயர்ப்பாகிய வன்னியரென்னும் பெயரான் பின்னர் அப்பல்லவர் வழங்கப்பட்டாரென்று கொள்ள இடமுண்டு. இது வனமென்ப தடியாகத் தோன்றிய வடசொற் சிதைவு. காலப்போக்கிற் பல்லவரென்னும் பெயர் பள்ளிகளென மருவி வழங்கலாயிற்,றென்பது புலவர் சிவங் கருணுலய பாண்டியனுர் கருத்து.

இவ்வாருக வன்னியரின் தோற்றம் பற்றிப் பல கருத்துக்கள் வழங்கி வருகின்றன. அவற்றுள் எது கொள்ளப்படினும், அவர்கள் அரசர்களாற் கௌரவிக்கப்பட்ட குலத்தினராகவும் பெரும் வீரர்களாகவும் விளங்கினுர்கள் என்பது பெறப்படும்.

## இலங்கையில் வன்னியர்.

இலங்கைக்கு வன்னியர் வந்தவரலாறு; ஓரளவு கோணேசர் கல்வெட்டிலும், பெருமளவு வையாபாடலிலும் சொல்

லப்பட்டிருக்கிறது. குளக்கோட்டரசன் 'திருகோணமலை நாதர்க்குச்' சேவைசெய்யவென மருங்கூரிலிருந்து முதலில் முப்பது வன்னிய குடிகளைக் கொண்டுவந்தானென்றும் பின்னர், 'அரன் தொழும்புக் காட்போதா' தென்று தானத்தார் வரிப்பத்தார் ஆகியோரையும் கொணர்வித்தானென்றும், அவர்களுக்குட் பிணக்குவரின் தீர்த்து வைப்பதற்கென மதுரையிலிருந்து தனியுண்ணாப்பூபாலனென்ற வன்னிமையை வரவழைத்தானென்றும் கோணேசர் கல்வெட்டுக் கூறும்.

வையாபாடலின்படி, மதுராபுரியிலிருந்து அறுபது வன்னியர்கள், மாருதப்பிரவையின் மகன் சிங்கமன்னவன் (வாலசிங்கன், வரராசசிங்கன்) காலத்தில் அவன் மணவினை சம்பந்தமாக இலங்கை வந்தார்கள். முதல் வந்த அவ்வறுபது வன்னியரும் அடங்காப்பதிக் கனுப்பப்பட்டனர். அவர்களுள் ஒரு வன்னியன் கண்டி நகரில் திசை (Disawa) ஆக இருந்தான். இவனே சிங்கள மக்களுள் வன்னியகுலம் வளர்வதற்குக் காரணனாயிருந்தானென்று கொள்ளலாம்.

இவ்வன்னியர்கள் அடங்காப்பதியில் மேலும் குடியேற்றஞ் செய்யவிரும்பி, மதுரை, மருங்கூர், திருச்சினாப்பள்ளி, மலையாளம், துளுவம், தொண்டைமண்டலம் ஆகிய இடங்களிலிருந்து பதினெண் சாதி மக்களையும் வரவழைத்தனர். அப்பொழுது 'முல்லை மாலாணன், சிவலை மாலாணன், சருகி மாலாணன், வாட்சிங்கராட்சி' ஆகிய வன்னியர்களும் வந்து முள்ளிமாநகரிற் குடியேறினர்.

அதனைத் தொடர்ந்து கலிஆண்டு 3392இல்(கி.பி. 199இல்) வீரநாராயணச் செட்டி யென்போன் அல்லியரசாணிக்கு முத்துக் கொடுப்பதற்காக ஓடத்திற் புறப்பட்டுப் போனவன் புயலுக்கஞ்சிக் 'கடல் மலையைச் 'சார்ந்தான்'. அம்மலைக்குக் குதிரைமலை யென்று பெயரிட்டான். அங்கே தன் திரவியங்களைப் புதைத்து வைத்துக் காளியென்னுந் தெய்வத்தைக் காவலிட்டுக் கடற் சிலாப முண்டாக்கி, அங்கே ஐயனாரை நிறுவிப் பின் செட்டிகுளப்பதிக்கேகி 'வவ்வாலை, என்ற பெயருடைய கேணியொன்றையும் சந்திரசேகரன் கோயிலையும் உண்டாக்கினான். இச்சம்பவத்தைத் திரு. ஜே. பி. லூயிஸ் என்பார், பழைய தமிழ்க் கையெழுத்துக் குறிப்புக்களை ஆதாரமாகக் கொண்டு எழுதிய நூலில், 'சுமார் கி. பி. 247 இல் மதுரையிலிருந்து பல பரவர்களுடன் வந்த வீரவராயன் செட்டி என்ற பெயருடைய வாணிகன் ஒருவன்

மரக்கலம் உடைந்து மன்னூரின் மேற்குக்கரையை வந்தடைந்தான்' என்றும், 'பின் தன்னைச் சேர்ந்தாருடன் வந்து செட்டிகுளத்திற் குடியேறி அங்கே 'வவ்வாலை' என்ற பெயருடைய கேணி யொன்றையும் சந்திரசேகரருக்குக் கோயில் ஒன்றையும் சுமார் கி.பி. 289 இல் அமைத்தான்' என்றும் குறிப்பிட்டுள்ளார்.[1]

குதிரைமலை யென்ற இடப்பெயர் கொங்கு நாட்டிலுமிருக்கக் காணலாம். குமணன் ஆட்சியில் இருந்த முதிரமலை, பின்னர் குதிரைமலையென வழங்கலாயிற்று[2].

இலங்கைச் சிங்க மன்னவனுக்குப் பெண்ணனுப்பிய மதுராபுரி மன்னன் சிங்ககேது, கொங்கர் கோன் என்றும் வருணிக்கப்படுகிறான். எனவே, அக்காலத்திற் கொங்கு நாடும் மதுராபுரி மன்னனாட்சியிலேயே இருந்ததெனல் சாலும். குறித்த வீரநாராயணச் செட்டி, கொங்குநாட்டுக் குதிரைமலை என்ற ஊரிலிருந்து வந்தவனாகலாம். அதனாற்றான் போலும், தான் இலங்கையில் முதலிலே அடைந்த இடத்துக்குக் 'குதிரைமலை'யெனப் பெரிட்டான்.

ஆதியில் இலங்கைக்கு வந்த வன்னியர்கள் மதுரை மாவட்டத்திலிருந்து வந்தனரென வையாபாடலும் பிறநூல்களும் கூறும். மதுரை நகரையண்டி அதன் வடமேற்கில் 'மாங்குளம்' என்ற ஊரும், அந்நகரின் மேற்கில் 'கொங்கன் புளியங் குளம்' என்ற ஊரும் ஆதித் தமிழ் நாட்டிலிருந்தன என்பதை, மதுரை வட்டாரத்திற் காணப்பட்ட மாங்குளம் கல்வெட்டுக்களாலும் புளியங்குளம் கல்வெட்டுக்களாலும் இப்பொழுது அறிய முடிகிறது. அவ்வூர்களிலிருந்து வந்த வன்னியர்கள், தங்கள் சொந்த ஊர்களின் ஞாபகமாகத் தாம் புதிதாகக் குடியேறிய ஊர்களுக்கும் அப்பெயர்களை இட முனைந்திருப்பரென்பது பொருத்தமானதே. சில பெயர்கள் நிலைத்தும் சில நிலையாமலும் போயிருக்கலாம். அவ்வாறு நிலைத்த பெயர்களுள் வன்னி நாட்டிலுள்ள மாங்குளம் புளியங்குளம் என்ற அயலூர்ப் பெயர்கள் மதுரை நகரின் அயலேயிருந்த மாங்குளம், கொங்கன் புளியங்குளம் ஆகிய ஊர்களை நினைவுபடுத்துகின்றன.

அடங்காப் பதியில் வந்து குடியேறிய வன்னியர்கள், அப்பதியில் வாழ்ந்த பூர்வீக குடிகளின் கொடுங்கோன்மை

---

1. Manual of Vanni.
2. ஊரும் பேரும் — சேதுப்பிள்ளை

யைச் சகிக்க முடியாதவர்களாகி, அவர்களை அழிக்க எண்ணி மதுரையைச் சார்ந்த இடங்களிலிருந்து மேலும் சில வன்னியர்களை வரவழைத்தனர். இவ்வழைப்பையேற்று வந்த வன்னியர்கள், கறுத்தவராய சிங்கம், தில்லி(தெல்லி), திடவீரசிங்கன், குடைகாத்தான், முடிகாத்தான், வாகுதேவன், மாதேவன், இராச சிங்கன், இளஞ்சிங்கவாகு, சோழையன், அங்க சிங், கன்(அங்கசன்) கட்டையர், காலிங்கராசன், சுபதிட்டன் கேப்பையினூர், மாப்பையினூர் ஊமைச்சியார், சோதிவீரன், சொக்கநாதன் இளஞ்சிங்கமாப்பாணன், நல்லதேவன், மாப்பாணதேவன், வீரவாகு, தானத்தார், வரிப்பத்தார் ஆகியோராவர்.

## அடங்காப்பதியில் வாழ்ந்த ஆதிக்குடிகள்

வன்னியர்கள் இலங்கைக்கு வருமுன் அடங்காப்பதியில் வாழ்ந்த மக்களினங்காரணமாகவே அதற்கு அப் பெயரிட்டிருத்தல் வேண்டும். அப்பொழுது அம்மக்கள் யாருக்கு மடங்காதவர்களாய் வாழ்ந்தனர் என்பது இதனுல் வெளிப்படையாகிறது. வன்னியர் வருவதற்கு முன், அடங்காப்பதியிலுள்ள ஊர்களாய முள்ளிமாநகரிற் சாண்டார் அரசாண்டனர் என்றும், கணுக்கேணியில் வில்லிகுலப் பறையர் அரசு செலுத்தினர் என்றும் தனிக்கல்லிற் சகரன் என்றும் மகரன் என்றுஞ் சொல்லப்படும் வேடர் அரசாட்சி செய்தனர் என்றும், கிழக்கு மூலையில் 'இராமருக்குத் தோற்றேயகன்ற ராட்சதர்' ஆட்சி செலுத்தினர் என்றும், மேற்கு மூலையில் அவர்களுள் இழிந்தோராட்சி நடந்ததென்றும் வையாபாடல் கூறும். எனவே, அடங்காப்பதியில் வாழ்ந்த ஆதிக்குடிகள் இவர்களெனல் சாலும். இவர்கள் அப்பொழுது அப்பகுதியைத் தனிக்கல், கணுக்கேணி, முள்ளிமாநகர், கிழக்கு மூலை, மேற்கு மூலை எனவைந்து பகுதிகளாகப் பிரித்தரசாண்டனர் என்பதும் இவற்ருற் புலனுகும்.

## அடங்காப்பதி வாழ் ஆதிக் குடிகளை வன்னியர் அடக்கியமை

வையாபாடலின்படி, கணுக்கேணியில் அரசு செலுத்தி வாழ்ந்த வில்லிகுலப் பறையரைத் திடவீரசிங்கனென்ற வன்னியன் போரில் வென்று அப்பகுதிக்கதிபதியாஞன். சந்திரவன் என்ற சாண்டார் தலைவனை அவன் பதியாகிய முள்ளிமா நகரிலே போர் செய்து வென்று அப்பற்றை ஆண்

டான் மெய்த்தேவன் என்ற வன்னியன். தனிக்கல்லிலே வாழ்ந்த வேடர்கள் தலைவராய சகரன், மகரன் என்பவரை வென்று அவர் குலத்தை அழித்து ஆங்கரசு செய்தான் வாகுதேவன் என்ற வன்னியன். இளஞ்சிங்கவாகென்ற வன்னிய வீரன் இராட்சத குலத்தினரைப் போரில் அழித்து, அவர்கள் வாழ்ந்த கிழக்கு மூலை, மேற்கு மூலையாகிய பகுதிகளைக் கைப்பற்றியாண்டான். இவனே பின்னர் வன்னி நாடு முழுவதற்கும் அதிபதியானான்,

## இந்நூல் கூறும் ஏனைய வன்னியர்

காலிங்கரும் கட்டையரும் கச்சாயிற் குடியேறி வாழ்ந்தனர். தெல்லி என்ற வன்னியன் பழையென்ற ஊர் சென்று வதிந்தான். மூக்கையினர் (யாப்பையினர்) கேப்பையினர் ஆகியோர் கரைப்பற்றில் வாழ்ந்தனர். ஊமைச்சி என்ற பெண் கருவாட்டுக்கேணி என்ற இடத்திற் குடியமர்ந்தாள். அங்கசன் (அங்கசிங்கன்) கட்டுக்குளப் பற்றிலமர்ந்தான். சிங்கவாகு திருகோணமலையை யடைந்தான். வெருகல் தம்பலகமம் ஆய பகுதிக்கு மாமுகன் சென்றான். கொட்டியாரப்பற்றிற் சுபதிட்டன் அரசையாண்டான். மேலும், வையாபாடல், முகமாலையில் மூன்று வன்னியர்கள் வந்திருந்தார்கள் என்று கூறுகிறது. வீரமழவராயன், நீலமழவராயன் ஆகியோர் யாழ்ப்பாணத்தில் வாழ்ந்தார்கள் என்றும், பூபாலவன்னிமை, கோபாலன் ஆகியோர் திரியாய், கட்டுக்குளப் பகுதியில் வாழ்ந்தனர் என்றும், வில்லவராயன் நல்லூரில் வாழ்ந்தானென்றும் இந்நூல் காட்டுகின்றது. மற்றும், செட்டிகுளத்திலே தேவராயன், கோடிதேவன், கந்தவனத்தான் ஆகியோரும், பனங்காமத்திலே துங்கராயனும், துணுக்காயிலே சோதிநாதன், சிங்கவாகு ஆகியோரும் வதிந்தனர்.

## அசுரரால் அழிந்த வன்னியர்

இளஞ்சிங்கவாகு இராட்சதரோடு போர் செய்து வெற்றி கொண்ட போதும், அவர்களை அவனால் முற்றாக அடக்கிவிட முடியாதிருந்தது. அதனால் அவ்வசுரர்களை அடியோடு அழித்து விட வேண்டுமென்று ஐம்பத்துநாலு வன்னியர்கள் ஒன்று சேர்ந்து அவர்களை எதிர்த்துப் போராடினர். அப்போரிலே அசுரர்கள் பெருஞ் சேதமடைந்து சிதைந்தனரெனினும் அவர்களுக்கெதிராய்ச் சமர்விளைத்த ஐம்பத்துநான்கு வன்னியரும் அப்போரிற் பட்டொழிந்தனர். அதன்பின் எஞ்சி

யிருந்த ஐந்து வன்னியரும் அடங்காப்பற்றை ஐந்து பற்றுகப் பிரித்தரசாண்டனர். அவ்வேளையில், வன்னியர் ஐவருங் கூடி இளஞ்சிங்கவாகுவை வன்னிநாடு முழுவதற்கு மதிபதியாக்கி, மெய்த்தேவன், நல்லவாகு, இராசசிங்கன் ஆகியோரைத் தந்திரத்தலைவரும் மந்திரிகளுமாக்கி மதுரைக்கு மீண்டு சென்றனர். செல்லும் வழியிற் கடலிலே திமிங்கிலம் கப்பலைக் கவிழ்க்க, ஐவரும் இறந்துபட்டனர். இதையறிந்த அவ் வன்னியர் மனைவியர் தங்கணவரைக் காண ஓடமேறி இலங்கைக்குப் புறப்பட்டனர். வன்னியர் இறந்த செய்தியை அவர் மனைவியர்க்கறிவித்தற் பொருட்டாயனுப்பப்பட்ட தூதுவர் யாழ்ப்பாணத்தில் அவ்வன்னிச்சியர் வந்திறங்கிய துறையில் அவரைச் சந்தித்துத் தாங் கொணர்ந்த செய்தியைத் தெரிவித்தனர். தங்கணவர் இறந்தனரென்ற செய்தி செவியுற்ற வன்னிச்சியர் செல்வி வாய்க்கால் எனுமிடத்திலே தீமூட்டி அதனிடை வீழ்ந்து உயிர் துறந்தனர். அவ்வாறிறந்த வன்னிச்சியர் பின்னர் நாச்சிமாரென வழிபடப்பட்டனர்.

மதுரையிலிருந்து ஓடமேறி வந்த வன்னிச்சியருள் ஒருத்தி மட்டும் தன் கணவன் கண்டி நகரிலே திசையாக (திசாவ) இருக்கிறானென் றறிந்து அங்கு சென்றாள்.

## வன்னியர்பற்றிய பிறநூற் குறிப்புக்கள்

இலங்கை வன்னியர்பற்றிய சில குறிப்புக்களை யாழ்ப்பாண வைபவமாலையிலும், மகாவம்சம் என்ற இலங்கை வரலாறு சம்பந்தமான பழைய பாளி நூலிலும் காணலாம். அவற்றுள் வன்னியர் காலம்பற்றி நிர்ணயிக்க உதவும் குறிப்பினை மட்டும் கவனிப்போம்.

'சாலிவாகன சகாப்தம் 515ஆம் (கி. பி. 593) வருஷத்திலே இலங்கை யரசனாயிருந்த அக்கிரபோதி மகாராசன், அவ்வன்னியர்கள் தாங்களும் அரசர்களென்னும் எண்ணங் கொள்ளப் பார்த்ததை அறிந்து அவ்வன்னியர்களின் அதிகாரத்தைக் குறைத்துத் தன் ஆணையைச் சரியாகச் செலுத்தி வந்தான். அதுமுதல் அவ்வன்னியர்கள் நாட்டதிகாரிகளாய் மாத்திரம் ஆண்டு வந்தார்கள்' என்று யாழ்ப்பாண வைபவ மாலை கூறும்.

பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த மயில்வாகனப் புலவர் மகாவம்சத்தைப்பற்றி அறிந்திருக்கவில்லை. அந்நூல்

அப்பொழுது பாளி மொழியில் இருந்தமையாலும், சில புத்த பிக்குகளின் கையில் மட்டுமே அது மறைந்து கிடந்தமையாலும், அந்நூல்பற்றிப் பெரும்பாலான சிங்கள மக்களே அறியாதிருந்தனர். சென்ற நூற்றுண்டின் நடுப்பகுதியிலேயே பொதுமக்களுக்குத் தெரியவந்த மகாவம்சத்தில், முதலாம் அக்கபோதி மன்னன் கி. பி. 568 முதல்601வரை அரசாண்டான் எனக் கூறப்பட்டுள்ளது. அக்கபோதியின் காலம்பற்றிய குறிப்பு, மேற்குறித்த இருவேறு வாயிலாகவும் ஒத்திருக்கக் காண்கிறோம். அக்காலத்தில், அதாவது கி. பி. ஆறும் நூற்றுண்டில், இலங்கையிலே வன்னியர்கள் ஆட்சிசெலுத்தும் நிலையில் இருந்தார்கள் என்பது இதனுற் பெறப்படுகிறது. எனவே, கி. பி. 12ஆம் நூற்றுண்டின் பின்னரே யாழ்ப்பாணத்தில் அரசு தலையெடுத்ததென்றும் அதன் பின்னரே வன்னிர் இலங்கை வந்தனர் என்றுங் கூறுவோர் கருத்துப் பொருந்தாமை இதனுலறியப்படும்.

## வரலாற்றுத் தடுமாற்றங்கள்

கூழங்கைச் சக்கரவர்த்தியைக் காலிங்கச் சக்கரவர்த்தியென வலிந்து கண்டும், 'கோளூறு கரத்துக் குரிசி'லாய கூழங்கைச் சக்கரவர்த்திக்கு விஜய கூழங்கை ஆரியச் சக்கரவர்த்தியென்ற பட்டத்தைத் திணித்துக் கட்டியும் வரலாற்றைப் பெரிதுந் திரிபுபடுத்திய சரித்திர ஆசிரியர் சிலர், பெயர்த் தடுமாற்றங்களிற் சிக்குப்பட்டு, யாழ்ப்பாணத்திலே தமிழர் ஆட்சி கி. பி. 12ஆம் நூற்றுண்டின் பின்னரே ஏற்பட்டதென நாட்டப் பெரிதும் முனைந்துள்ளனர். கூழங்கைச் சக்கரவர்த்தி வேறு, குளக்கோடன் வேறு, காலிங்கச் சக்கரவர்த்தி வேறு, ஆரியச்சக்கரவர்த்தி வேறு என்பதைக் காண முடியாத வரலாற்றுசிரியர்கள், அவ்வனைவரது வரலாற்றையும் ஒன்றுடனென்று கலந்தும் அவிழ்க்க முடியாத சிக்கலாக்கி மலைப்புற்றிருக்கிறுர்களென்பது, இப்பொழுதுள்ள யாழ்ப்பாணச் சரித்திர ஆசிரியர்களின் முரண்பாடுகளால் தெள்ளிதிற் புலப்படும்.

கூழங்கைச் சக்கரவர்த்தியே யாழ்ப்பாணத்தின் முதலரசனுவான். அவன் காலம் கி. மு. 101 வரையிலாமென வையா பாடல் கூறும். வையா பாடல் நம்பத்தக்க வரலாற்று நூல் என்று நாம் கண்டபின், இதனை நம்பாதுவிட நியாயமில்லை. குளக்கோடனும் கூழங்கைச் சக்கரவர்த்தியும் ஒருவரென்றே, அன்றி உறவினரென்றே எங்குங் கூறப்படவில்லை.

உக்கிரசிங்க சேனனும் குளக்கோடனும் ஒருவரே யென்று கொண்டபோதும், அவருக்கும் கூழங்கைச் சக்கரவர்த்திக்கும் ஆதி உறவு எதுவுமில்லை (உக்கிரசிங்க சேனன் மனைவி கூழங்கைச் சக்கரவர்த்தியின் மைத்துனி என்பதைத் தவிர.)

மாகன் என்ற பெயர் கொண்ட காலிங்கச் சக்கரவர்த்தி இலங்கையின் பெரும் பகுதியினைக் கி. பி. 1215 முதல் 1242 வரை ஆண்டவன். யாழ்ப்பாணத்துக்கும் அவன் ஒருகால் அரசனானெனன இலங்கை வரலாறு கூறும். அவனே காலிங்கச் சக்கரவர்த்தியாவன். இவ்வாறே கி. பி. 1245 ஆம் ஆண்டளவிற் சந்திரபானு என்ற சாவகனொருவன் படையெடுத்து வந்து இலங்கையிற் பல பாகங்களைக் கைப்பற்றினான். அவன் சாவகச் சக்கரவர்த்தியாகலாம். இவன் காரணமாகவே யாழ்ப்பாணத்திற் சாவகச்சேரி (சாவகர் சேரி), சாவாங்கோட்டை (சாவகர் கோட்டை) ஆகிய இடப் பெயர்கள் ஏற்பட்டன.

இனி ஆரியச் சக்கரவர்த்தி யென்பான் கி. பி. 1275 ஆம் ஆண்டளவில் 'ஈழ நாட்டின்மேற் படையெடுத்துச் சென்று அதனைக் கைப்பற்றிப் பெரு வெற்றியுடன் திரும்பினான்'[1] என்றும், அவன் மாறவர்மன் குலசேகர பாண்டியனின் அமைச்சனாகவும் படைத்தலைவனாகவும் விளங்கியவன் என்றும் 'பாண்டியர் வரலாறு' கூறும். இவனைப் புகழேந்திப் புலவர் ஈழநாடு சென்று 'ஆரிய சேகரன்' எனப் பாடிப் பரிசில் பெற்றாரென்று தமிழ் நாவலர் சரிதை கூறும்[2]. அவன் மதிதுங்கன் என்ற இயற்பெயருடன் பாண்டி நாட்டிலுள்ள சக்கரவர்த்தி நல்லூரில் வாழ்ந்தவன் என்றும், 'தனி நின்று வென்ற பெருமாள்' எனும் பட்டம் பெற்றவனென்றும் அந்நூல் கூறும்.

'கோளூறு கரத்துக் குரிசி'லாய கூழங்கைச் சக்கரவர்த்தியை இவ்வாரியச் சக்கரவர்த்தியுடன் வரலாற்றாசிரியர் பலர் பிணைத்தமையாற்றான், அவன் பெயர் கூழங்கை ஆரியச் சக்கரவர்த்தியென்றும், விஜய கூழங்கை ஆரியச் சக்கரவர்த்தியென்றுந் திரிந்து, இவன் காலத்துடன் இணைந்து முதல் யாழ்ப்பாணத் தமிழ் மன்னன் கி. பி. 13 ஆம் நூற்றாண்டினனென்னுங் கொள்கைக்கிடமளித்தது போலும்.

---

1. T. V. சதாசிவ பண்டாரத்தார்—பாண்டியர் வரலாறு—மூன்றாம் பதிப்பு 1956—பக். 147.
2. தமிழ் நாவலர் சரிதை—கழகப் பதிப்பு—பக். 121, 122.

### பரராசசேகரன் வரலாறு

வையாபாடலின் இறுதியிலே பரராசசேகரன் பற்றிய குறிப்புக்கள் சில காணப்படுகின்றன. தென்னிலங்கை யரசரி சிலர் கொடுங்கோலோச்சிய காரணத்தாற் குடிசனங்கள் பரராசசேகரன்பால் முறையிட, அவன் தம்பியரோடு படை நடத்திச் சென்று பகையரசை அடக்கினான். பின்னர், ஆரும் பரராசசேகரனாகிய அவன் தென்னிலங்கையிலே கோயி லொன்று கட்டுவதற்காகத் 'தன்னகர்த் தொண்டைமண்ட லந்தனிலுகந்தருளும் கன்னதேவருக்கொரு திருமுக மனுப் பினன்' என்று வையாபாடல் 89ஆம் செய்யுள் கூறும். 91 ஆம் செய்யுளில், 'எங்குலத்தோன் பரராச னிலங்கைதனி லரசுபுரிந்து......' என்று அக் கன்னதேவர் கூறுவதாகச் சொல்லப்படுகிறது. இவற்றிலிருந்து பரராசசேகரனது மூதா தையர் தொண்டைமண்டலத்தவர் என நாம் ஊகிக்கலாம்.

### வன்னிநாட்டுத் தெய்வங்கள்

வன்னி நாட்டுக்கு முதலில் வணக்கத்துக்குரிய தெய்வங் களாக வந்தவை காளியும் ஐயனாரும் சடைமுனியுமென வையாபாடல் மூலமாக அறியக் கிடக்கிறது. வீரநாராயணச் செட்டி இலங்கைக்கு வந்தபோது, குதிரைமலையின் கண் காளியையும், வவ்வாலையென்ற கேணிக்கருகே சடைமுனி யையும் சாத்தனையும் தன் திரவியங்களுக்குக் காவலாக வைத்தான். தட்சணகைலாச புராணம், கோணேசர் கல் வெட்டு ஆகியவற்றின்படி அப்பொழுது திருகோணமலை யிலே அரன்கோயிலுமிருந்தது. அதுமட்டுமன்றிக் கதிரை யம்பதியில் அரன்மகவின் கோயிலுமிருந்ததாகக் குறிப்பிடப் படுகிறது. வீரநாராயணச் செட்டி கட்டுவித்த கோயில்களுள் சந்திரசேகரன் கோயிலுமொன்று.

பல காலங்களுக்குப் பின்வந்தவர்கள், காட்டு விநாய கரைக் குலதெய்வமாகக் கொணர்ந்தனர். அவர்களோடு வந்த சிலர் வீரபத்திரனையும் கொண்டு வந்தனர்.

ஆரும் பரராசசேகரன் காலத்தில் ஐங்கரன் குமரேசன், மூத்தநயினார், சித்திரவேலாயுதர் ஆகிய தெய்வங்களும் கொண்டுவரப்பட்டன.

தங்கள் கணவர் இறந்த மாத்திரத்தே எரிபுகுந்துயிர் துறந்த கற்புடை உயர்குலப் பெண்கள், 'நாச்சிமார்' எனுந்

தெய்வங்களாகப் போற்றப்பட்டனர். அவ்வாறு வீரமரண மெய்திய வன்னியரும் தேவுக்களாகவே[1] மதிக்கப்பட்டனர்.

பிற்காலத்தில் வன்னி நாட்டிலே புகழ்பெற்ற தெய்வமாக விளங்கிய பத்தினி அல்லது கண்ணகி பற்றியோ, நாகவணக்கம் பற்றியோ எதுவும் இந்நூலிற் குறிப்பிடப்படவில்லை. இக்காலத்திற் புகழ்பெற்று விளங்கும் மடு மாதா கோயில், வன்னியர் ஆட்சிக் காலத்திலே கண்ணகி கோயிலாயிருந்ததென்பது கர்ணபரம்பரைக் கதை. இப்பழமையான கூற்றையாதரிக்கும் வகையிலே திரு லீவேர்ஸ் என்பவர் தமது 'வடமத்திய மாகாணக் கைநூலி'ல், 'மடுவிலிருக்கும் தூயமேரி மாதாவின் திருக்கோயில் புத்த சமயத்தினராலும் அநேக தமிழ் யாத்திரிகர்களாலும் பத்தினி அம்மன் கோயிலென்றே வழிபடப்பட்டு வருகிறது'[2] என்று குறிப்பிட்டுள்ளார்.

## கோணேசர் கல்வெட்டு நூல்

கோணேசர் கல்வெட்டென்ற நூலிற் குளக்கோட்டு மன்னன் ஆலயமமைத்தது கலி பிறந்து 512ஆம் ஆண்டிலெனச் சொல்லப்படுகிறது. இவ்வாண்டுக்கும் ஏனைய நூல்களில் இச்சம்பவம் நிகழ்ந்ததாகக் கூறப்படும் ஆண்டுக்குமதிக வித்தியாசமிருக்கக் காண்பதால், இந்நூலிற் கூறப்படும் ஆண்டுக் கணக்கிலே தவறேற்பட்டிருக்கலாமென்றெண்ண இடமுண்டு. 'பறங்கியர்', 'உலாந்தா மன்னன்', 'இங்கிலீசர்' ஆகியோர் இலங்கையை அரசாண்ட சம்பவங்கள் இதிற் சொல்லப்பட்டிருப்பதால், இந்நூல் பதினெட்டாம் நூற்றாண்டளவினதென்றே கொள்ளவேண்டும். அன்றேல், அச்சம்பவங்கள் பிற்சேர்க்கையாதல் வேண்டும். யாழ்ப்பாண வைபவமாலை அவ்வரசன் பெயரைக் குளக்கோட்டன் எனக் குறிப்பிடும். 'குளக்கோடன்' என்பது குளமும் கோட்டமுஞ் சமைத்தவன் எனப் பொருள்படுங் காரணப்பெயரேயாம். அவனியற்பெயரின்னதென்பதனை இவ்வாசிரியராற் றெரிந்துகொள்ள முடியாத அளவிற்கு அவன் வரலாறு இந்நூலாசிரியர் காலத்திற் பழமையெய்தியிருந்தது போலும். கோணேசர் கல்வெட்டு அவன் பெயரைக் 'குளக்கோடன்' என்றே குறிப்பிடும். குளத்தின் வரம்

---

1. 'அண்ணமார்', என்னும் வையாபாடல் வசனம்.
2. Mr. Levers – Manual of the North Central Province.

பமைத்தவனென்பது அதன் பொருளாகும். குளக்கோடு என்பது தென் இந்தியாவில் கேரளம் போன்ற பகுதிகளில் ஒரு குடும்பப் பெயராக வழங்கி வருவதால், அக்குடும்பத்தைச் சார்ந்தவன் என்ற கருத்திலும் அவன் குளக்கோடன் எனக் குறிக்கப்பட்டிருத்தல் கூடும். அல்லது இவன் பின்னரே அக்குடும்பப் பெயர் எற்பட்டது என்றுங் கருதலாம்'

கோணேசர் கல்வெட்டினைக் கவிராசர் செய்தாரென அந்நூல் முகப்பிற் பொறிக்கப்பட்டிருக்கிறது. 'கவிராசர்' என்பது புலவனின் சிறப்புப் பெயரேயன்றி இயற்பெயரன்று. நூற்பொருள் சொல்லும் செய்யுளில் அந்நூலாசிரியன் பெயர் 'கவிராசவரோதய விற்பன்னன்' எனக் கூறப்படுகிறது 'கவிராச' னென்பதும் 'விற்பன்ன' னென்பதும் விசேடணச் சொற்களாகக் கருதினால், 'வரோதயன்' என்பதே அந்நூலாசிரியன் பெயராகக் கொள்ளக்கிடக்கிறது அதுகூட இயற்பெயரா அன்றி விசேடணச்சொல்லா என்பது ஐயத்துக்கிடமானதே. ஏனெனில், வரோதயன் என்றொரு புலவனைப் பற்றி யாரும் எங்குங் குறிப்பிடவில்லை எனவே, இந்நூலை வேறொரு பெயருள்ள புலவன் எழுதியிருக்கலாமோ என்று சந்தேகிக்க இடமுண்டு. அவன் கவிராசனென்ற விருதையுடையவனாதல் சாலும். கோணேசர் கல்வெட்டின் காப்புச் செய்யுள், இச்சந்தேகத்தினை மேலும் வலுப்பெறச் செய்வதாயமைந்துள்ளது. இந்நூலின் காப்புச் செய்யுளும் வையாபாடலின் காப்புச் செய்யுளும் ஒரே செய்யுளின் இரு பிரதிகளாய் அமைந்திருப்பதனை நோக்குமிடத்து, அவ்விரு நூல்களையும் ஒரே ஆசிரியர் இயற்றியிருப்பாரோ என எண்ணத் தோன்றுகிறது. குறித்த காப்புச் செய்யுட்களின் முதலடியிலுள்ள இரண்டாஞ் சொல், ஒன்றில் 'கோணே'யென்றும், மற்றதில் 'இலங்கை' யென்றும் நூலுக்கேற்றவாறு மாற்றப்பட்டிருக்கிறது. மூன்றுமடியின் மூன்றுஞ் சொல், ஒன்றில் 'சாமி' என்றும் மற்றதில் 'தயங்கு' என்றும் மாறிக் காணப்படுகிறது. இவற்றைவிட அச்செய்யுட்களில் வேறெவ்வித பேதமுமில்லை. இரண்டாமடியில் 'எவ்வுலகம் யாவையும்' எனப் பொருள் மயக்குற ஒன்றிலிருப்பது போலவே மற்றதிலும் அமைந்திருக்கிறது. வையாபாடல் ஏடுகளிற் காணப்பட்டபடி 'எவ்வுலகம் யாவையு' மெனல் பொருந்தாதென இப்பதிப்பின் காப்புச் செய்யுளில் அப்பகுதி 'உலகம் யாவையு' மென மாற்றப்பட்டிருத்தலை அவதானிக்கலாம், ஒரே உருவும் ஒரே பொருளும், ஒரே வழுவும், ஒரே சொற்களும் கொண்ட

மைந்த அவ்விரு காப்புச் செய்யுட்களும் இருவேறு புலவர் களாற் செய்யப்பட்டனவாதல் சாலாது. மேலும், வையா பாடல் 39 ஆம் செய்யுளிற் 'குளக்கோடன்' என்று எழுதியி யிருப்பது போலவே இந்நூலிலும் அவ்வரசனைக் குறிப்பிடுகி ருர். இந்நூலிற் குறிப்பிடப்படும் 'தானத்தார்' 'வரிப்பத் தார்' ஆகியோர் அந்நூலிலும் குறிக்கப்பட்டுள்ளனர்.

இச்சான்றுகளை ஆதாரமாகக் கொண்டு நோக்குமிடத்து, வையாபாடலைச் செய்த ஆசிரியரே இந்நூலையும் செய் திருக்கலாமென்று தோன்றுகிறது. அந்நூலிற்போல இந் நூலிலும் இடைச் செருகல்கள் பல இடப்பட்டிருக்கின்றன. வையாபுரி ஐயர் 'செகராசசேகர மகாராசாவின் சமஸ்தான வித்துவான்' என வையாபாடல் ஏடுகளின் முகப்பிலெழுதப் பட்டிருத்த லவதானிக்கத்தக்கது. சமஸ்தான வித்துவானுக் குக் 'கவிராசர்' என்ற விருது வழங்கப்படுவதில் வியப்பேது மில்லை; வையாபாடல் எழுதிய பின் அவருக்கு அந்த விருது வழங்கப்பட்டிருக்கலாம்.

### கல்வெட்டுச் சான்று

கோணேசர் கோயிலில் இருந்ததாகக் கூறப்படும் கல் வெட்டொன்று, இப்பொழுது திருகோணமலைக் கோட்டை வாசலிற் காணப்படுகிறது. கோணேசர் ஆலயத்தைப் பிரித் துப் பறங்கியர் பிறடெறிக்(Fredric) கோட்டையைக் கட்டிய போது, அக்கல்வெட்டுள்ள கல், கோட்டை வாசலின் இடது பக்கத் தூணில் வைத்துக் கட்டப்பட்டுவிட்டது என்று கரு தப்படுகிறது. அக்கல்வெட்டில் இப்பொழுது காணப்படும் எழுத்துக்கள் பின்வருமா றிருக்கின்றன.

| | | |
|---|---|---|
| 'ன | னே | குள |
| காட | முடடு | |
| ருப | பணியை | |
| னனே | பறஙகி | |
| ககவே | மனன | |
| னபோ | னஞ | |
| னை | யய | றற |
| தேவை | த | |
| ரை | | |
| கள' | | |

இதனை ஆராய்ச்சி செய்து திருகோணேஸ்வரம் என்னும் நூலை எழுதிய புலவர் வை. சோமாஸ்கந்தர் அவர்களும்,

திரு அ. ஸ்ரீஸ்கந்தராசா அவர்களும் பின்வருமாறு கருத்துக் கொண்டுள்ளார்கள்:

'முன்னே குளக்
கோடன் மூட்டுந்
திருப் பணியைப்
பின்னே பறங்கி பி
ரிக்கவே மன்னவ
பின் பொண்ணாதை
தனே யியற்ற வழி
த் தேவைத்து
எண்ணரே பின்
னரசர் கள்.'

இக்கல்வெட்டுப் பாடலினைச் செவிவழிச் செய்தியாக வைத்துப் பாதுகாத்துவரும் திருகோணமலைப் பழங்குடி மக்கள், அதனைப் பின்வருமாறு கூறுகின்றார்கள்:

முன்னே குளக்கோடன் மூட்டுந் திருப்பணியைப்
பின்னே பறங்கி பிரிக்கவே — மன்னாகேள்
பூனைக்கண் செங்கண் புகைக்கண்ணன் ஆண்டபின்
தானே வடுகாய் விடும்.

யாழ்ப்பாண வைபவமாலையிலும், கோணேசர் கல்வெட்டு என்ற நூலிலும், வையா வசனத்திலும் இக்கதையின் விரிவினையே சுபதிட்டு முனிவர் வாயிலாகக் கேட்கிறோம். ஒன்றில் இக்கல்வெட்டு அக்கதைக்கு இடமளித்திருக்க வேண்டும், அன்றேல் அக்கதை இக்கல்வெட்டுக்குக் காரணமாயிருந்திருக்கவேண்டும். வையா பாடற் செய்யுள் நூலில் அக்கதை காணப்படாமை கவனிக்கத்தக்கது.

# குறியீட்டு விளக்கம்.

இந்நூலின் அடிக் குறிப்புக்களிலே காணப்படும் குறியீட்டெழுத்துக்களின் விளக்கம் கீழே தரப்படுகிறது:-

தி. ஏ. — திருகோணமலை ஏடு.

அ. ஏ. — அருட்பிரகாசத்தின் ஏடு.

அ. ப. — அருட்பிரகாசம் திருத்திய பதிப்பு.

சி. ப. — சிவானந்தன் பதிப்பு

# வையா பாடல்

காப்பு
(கலிவிருத்தம்)

திருவள ரிலங்கையின் சீரை யோதிட
ஒருபொரு [1]ளென்னவே யுலகம் யாவையும்
தருமர னருள்புரி [2]தயங்கு மும்மதம்
வருகரி முகனடி வழுத்தல் செய்குவாம். (1)

வணக்கம்
(கலித்துறை)

நாவி லங்கையி னன்மொழி யுரைத்திட நலஞ்சேர்
கோவி லம்பெறு [3]கோநகர் வளமெலாஞ் சிறக்க
மாவி [4]லஞ்செறி மல்லிகா வனமெனு நகர்வாழ்
தேவன் மாமல ரடிகளை முடிமிசைச் சேர்ப்பாம். (2)

1. ளென்னவெவ் (தி. ஏ.), ளெனவெவ் (கி. ப.)
2. தங்கு (அ. ஏ.), (அ. ப.), (கி. ப.)
3. கானகர் (அ. ஏ.)
4. ளஞ்செறி (அ. ப.)

## வருபொருள்

இலங்கை மாநக ரரசியற் [1]றிடுமர சன்றன்
குலங்க ளானதுங் குடிகள்வந் திடுமுறை தானுந்
தலங்கள் மீதினி லிராட்சதர் தமையடு திறனுந்
நலங்க ளாருநேர் நாடர [2]சாகிவந் ததுவும். (3)

மன்ன னானசூ ரியகுலத் தரசனை மாற்றிப்
பின்னர் மன்னவர் பிரிவுசெய் தரசியற் றியது
மன்ன போதினி லவர்களுக் கடையிடை யூறு
மின்ன காரண மென்றியா னிசைப்பதற் கெளிதோ. (4)

பொதிய மாமலைப் புங்கவன் பெற்றருள் புதல்வ
னதிக சித்தெனு மன்னவன் றவத்தில்வந் துதித்தோன்
[3]மதிமி குத்திடு [4]முனிசுப திட்டுமுன் மொழிந்த
புதிய காதையை [5]யவனடி போற்றியான் புகன்றேன். (5)

## அவையடக்கம்

(கலிவிருத்தம்)

[6]நாவிநன் புழுகுநல் லமிர்துந் தேனுமே
ராவியு மதுவும்பின் [7]னகலி டார்களால்
வாவிநன் பூநிகர் [8]மற்றென் காதையை
ஏவரு மறிவுளோ [9]ரேற்க வேண்டுமால். (6)

## ஆக்கியோன்

இலங்கையின் மண்டலத் தோர்தங் காதையை
நலம்பெறு தமிழினுல் நாடி யோதினுன்
தலம்பெறு [10]ததீசிமா [11]முனிதன் கோத்திரத்
திலங்குவை யாவென விசைக்கு நாதனே. (7)

---

1. றியவெழிலுடை யரசர் (தி. ஏ.)
2. சாதிவந் (அ. ஏ.), (அ. ப.), சி. ப.)
3. மதிமிகுத்த (தி. ஏ.)
4. மாமுனி (தி. ஏ.), (அ. ஏ.), (சி. ப.)
5. யன்னனடி (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
6. நாவிகநன் புளுகு (அ. ஏ.), நாவிகன் புனுகு (சி. ப.)
7. னகவிடார்களாள் (அ. ஏ.), னகலிடார்களாள் (அ. ப.), (சி. ப.)
8. மற்றெனக் (அ. ஏ.), (சி. ப.)
9. கேட்க (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
10. ததீசிதன் (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
11. தனது (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)

## நூல்

(எண்சீர் ஆசிரிய விருத்தம்)

[1]நாற்பதுபத் தாயிரத்து முப்பத் தீரா
யிரவருட மெனவறிஞர் நவிலி லக்க
மேற்றகலி யுகமதனின் முகனை யாக
எழுதரிய வச்சிரவா கென்போன் மைந்தன்
[2]ஆற்றல்பெறு மரசனிரா வணனென் ருேது
[3]மரக்கனயோத் திப்பதியான் தசர தற்குத்
தோற்றுமக னிராமன்பெண் சீதை தன்னைத்
தொடர்ந்துபிடித் திலங்கையிற்கொண் டேகி னுனே. (8)

அக்கதையை மாயனறிந் திளவ லோடு
மடைந்தருளி யனுமானைச் சாம்ப வானைத்
தொக்கசுக்ரீ வனைச்சேர்த்து வாலி தன்னைத்
[4]தொலைத்ததன்பின் குமுதனு தித்த னேடு
தக்கபடைத் துணையாயங் கதனு நீலன்
[5]ருனும்வா னரமெழுப தான வெள்ள
மெக்கிரியி லுள்ளவர்கள் யாரும் போற்ற
[6]வெழுந்திலங்கை நகரதனி லடைந்தா னன்றே. (9)

---

1. நாற்பத் தெட்டிலட்சத்து நாலுநூற்று நாற்பத்தெண்ணு யிரம் வருடம் யாவு, (தி. ஏ.)
   நாவிலட்சத்து முப்பதினுராயிர வருடமாகிய கலியுகந் தன்னில் (அ. ஏ.)
   நாவிலட்சத்து முப்பதினுராயிர வருடமாகிய கலியுகந் தன்னில் (அ. ப.), (சி. ப.)
2. தலம்பெறு (அ. ஏ.), (சி. ப.), தவம்பெறு (அ. ப.)
3. அரசனயோத்திப் பதியான் (அ. ஏ.), (அ. ப.), (கி. ப.)
4. தொலைத்தனன்பின் (தி. ஏ.)
5. ருனுய வானர (அ. ப.)
6. வெழுதிலங்கை (அ. ப.)

இலங்கைதனி லிராமன்வந் [1]திருத்த மாற்றம்
　　எழுதரிய விபீஷணன்கேட் [2]டங்கு செல்லத்
துலங்குதம தருளப்போ தேகொ டுத்துத்
　　தொல்லரக்க னிராவணனைத் தொலைத்த பின்பு
நலங்குலவு முடிவிபீ ஷணற்குச் சூட்டி
　　நகர்நண்ணிச் சிறைவிடுவித் தருளி னேடு
தலங்கள்புக ழிராமலிங்கந் தனைப்பூ சித்துத்
　　தரணிதனிற் றனதுநக ரடைந்தா னன்றே. (10)

சீர்விளங்கு மிராமனிரா [3]வணனைச் செற்றுச்
　　சென்றருளப் படுபடைஞர் தேவி யானே
[4]ரேர்விளங்கு மெமதுமுத லாளி யானே
　　றிறந்தனரிங் கெமைக்காவல் செய்வோ ரில்லை
[5]நீர்விளங்கி உரையுமெனத் [6]துகிலு மன்னி
　　நெடுங்கடல்சென் றனரதனை யரச னோர்ந்து
பேர்விளங்கு சாம்பவன்றன் கிளையில் வாழும்
　　பெரும்பரவர் தமையீந்தங் கருளி னானே. (11)

(எழுசீர் ஆசிரிய விருத்தம்)

அன்னது நிற்க விபீஷணன் [7]றன்மு
　　[8]னரியயாழ் வாசினை புரிவோன்
மின்னுள விலங்கை வடகடற் கரையில்
　　மேவிய மணற்றிடற் காட்டில்
தன்னிகர் பிறிதொன் றிலாதநல் வருக்கை
　　[9]தாலிளம் பூகமாத் தேங்கு
கன்னலென் றுரைக்கும் பயிரினை யியற்றிக்
　　கற்பக [10]தாருவென் றிசைத்தான். (12)

---

1. திருந்த (சி. ப.)
2. டெழுந்து (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
3. வணற்செயித்து (தி. ஏ.) வணனைச்சேற்று (அ. ஏ.), (சி. ப.)
4. நேர்விளங்கு (தி. ஏ.)
5. நீர்விளங்கும் (அ. ஏ.), (அ. ப.) (சி. ப.)
6. துகிலுமள்ளி (அ. ஏ.), (தி. ஏ.)
7. முன் (அ. ஏ.), (சி. ப.), (தி. ஏ.); முன்னர் (அ. ப.)
8. ஆரியாள் (அ. ப.),
9. தாளிளம் (அ. ப.), (சி. ப.)
10. தாரு வொன் (அ. ப.)

கற்பக தருவுங் காமர்மண் டபமுங்
காசினி தனிற்புரிந் ததற்பின்
தற்பரன் றன்னை நினைத்துசென் றருளித்
தசரதன் மைத்துன னான
விற்கரக் குலக்கே திவனென [1]வுரைக்கும்
வீரனை வணங்கியான் புரிந்த
நற்புவி தனக்கு நாயகம் [2]புரிய
நாதனே வேண்டுமென் றுரைத்தான். (13)

யாழிசை பயில்வோ னிசைத்தசொற் கேட்டங்
கிதமுறுந் தனதுமைந் தர்களிற்
கோளுறு கரத்துக் குரிசிலை யளிப்பக்
கொற்றவன் [3]சக்கர பதியென்
றேழ்பெரும் புவியி னிலங்கையாழ்ப் பாண
மிருந்தர [4]சியற்றின [5]னந்நாள்
நாளுறு கலிமூ வாயிர வருடம்
நாடர சளித்தவ னிருந்தான். (14)

அரசளித் தவனங் கிருந்திடு நாளி
லயோத்தி மன்னன் குலக்கேதுக்
குரியமைத் துனனவ் வுக்கிர சோழ
னுகந்துபெற் றிடுமக வானோர்
மரபினுக் குரிய சிங்ககே [6]தென்ற
[7]மைந்தனு மாமுகந் தரித்தங்
குரனொடு முதித்தாள் மாருதப் பிரவை
யுவமையில் வல்லியென் பவளும். (15)

---

1. மதிக்கும் (தி. ஏ.)
2. புரிந்து (அ. ஏ.), பரிந்து (அ. ப.), புரிந்த (சி. ப.)
3. சுக்கிரீ (அ. ப.), சுக்ர (சி. ப.)
4. சியற்றுநீ (தி. ஏ.)
5. யென்ன (தி. ஏ.)
6. தனன்றன் (தி. ஏ.), (அ. ஏ.), (சி. ப.)
7. மைந்தர்க்குள் (தி. ஏ.), மைந்தற்கு (சி. ப.)

கூடிய குதிரை முகமது மாறக்
[1]குணமுள தீர்த்தங்கள் யாவும்
தேடியே யிலங்கை நகரினிற் சென்று
திறமுள [2]கீரிமா மலையி
லாடினள் தீர்த்த மம்முக மகன்ற
தன்னதால் மாவிட்ட புரமென்
றேடரு நதியும் நிகரில வென்றே
யிறைஞ்சின ளிறைவனை நினைந்தே. (16)

பொன்னகர் நிகருங் கதிரையம் [3]பதியிற்
போயரன் மகவினை வணங்கிப்
பின்னருக் கிரம சிங்கசே னன்றன்
பெண்ணென விருந்தன ளதற்பின்
மன்னவ னடங்காப் பற்றினி லேகி
[4]மாநகர் [5]வாவெட்டி [6]மலையிற்
றன்னிக ரற்ற மண்டப [7]மியற்றித்
தன்னர சியற்றின ளிருந்தாள். (17)

அப்பொழு தன்னாள் றனக்கொரு மைந்த
னரியினின் முகமுமோர் வாலு
மொப்பனை [8]சொல்லற் கரியதா யுதித்தா
னுலகினில் விபீஷண னந்நாள்
செப்புதற் கரிய வைகுந்த பதவி
சேர்ந்திட நினைத்தவன் றன்னை
யெப்புவி தனக்கு மிறைவனா யிருத்தி
[9]யென்றினி திருத்தினா னியல்பால். (18)

---

1. குலவுநற் (தி. ஏ.), குலமுள (அ. ப.)
2. சியமா (தி. ஏ.)
3. கிரியிற் (தி. ஏ.)
4. வாழ்வுறு (அ. ப.)
5. வரவெட்டி (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
6. மலையென் (தி. ஏ.), (சி. ப.)
7. மதனிற் (தி. ஏ.)
8. செய்தற் (தி. ஏ.)
9. இணையில்வீ டேகின னப்பால் (அ. ப.)

மன்னவ னிராமன் கொடுத்திடு முடியும்
மந்திர வாளுமெவ் வுலகுந்
தன்னடி படுத்துஞ் சக்கர [1]மொன்று
தன்கையி லிடுகணை யாழி
மின்னிக ரிடையாள் மோகினி யென்னும்
வீரமா காளிமற் றுன்னித்
துன்னலர் தம்மைச் செகுத்திடு மென்றே
தொகைபெறக் கொடுத்தனன் மாதோ. (19)

[3]மானகர் தன்னை யாண்டிடு சிங்க
மன்னவன் தூதரை யழைத்துத்
தேனலர் மாலைப் புயத்தவன் சிங்க
கேதுவென் பானிட மணுகி
யான்மண முடிக்க [2]விசைத்திடு நீவி
ரென்னலு மடிமுறை பணிந்து
கானகங் கங்கை நீங்கியே மதுரைக்
காவலன் றனக்கிவை யுரைத்தார். (20)

(கலித்துறை)

கேட்டு மாமது ராபுரி மன்னவன் கிளர்ந்த
தாட்ட கம்பெறு வன்னியர் தரணிப குலத்தோர்
காட்ட கம்பெறு வாள்கட கஞ்சுழல் கையார்
கூட்ட மாயினு ரறுபது [4]பேரையுங் குறித்தான். (21)

குறித்து நீவிரிம் மாதினைக் கொண்டுசென் றிலங்கைப்
புறத்து மாநக ராளுவோற் குள்ளன புகன்று
மறத்த ராமென மற்றவற் காயிரங் கதிரோன்
திறத்து ளோர்புகழ் சந்திரன் றனைவிரு தீந்தான். (22)

சந்த பின்னவட் [5]கிணையிலா [6]வியந்திரத் திகிரி
வாய்ந்த வெண்மைசேர் குடைமுதல் வாகன முதவி
யேந்த லாமென வேகுமி னென்றலு மிறைஞ்சிக்
கூந்தல் சேர்முடி யழகினள் குதிரைமேற் கொண்டாள். (23)

---

1. தெண்டும் (அ. ஏ.), (அ. ப.), (அ. ப.), (சி. ப.)
2. விசைந்திடு (அ. ஏ.), (சி. ப.)
3. கானகரிலங்கை நீங்கியே (அ. ப.)
கானலங் கங்கை நீங்கியே (சி. ப.)
4. பெயரையுங் (தி. ஏ.)
5. கிடையலர் (தி. ஏ.), (அ. ஏ.)
6. மயேந்திரத் (அ. ஏ.), (அ. ப.), (கி. ப.)

குதிரை மீதினி லேறியே கொங்கர்கோன் புதல்வி
[1]மதியி னுள்சம தூதியை [2]மன்னவன் றனக்கு
விதிய தாய்மண முடித்தபின் [3]விளங்கிடு மடங்காப்
பதியை [4]நீரர சாண்மெனப் பார்த்திபன் [5]புகன்றான். (24)

தலைவ னவ்வரங் கொடுத்தபின் தரணிபர் தம்மு
ளிலைய யிற்கரத் [6]தொருவனத் திசையென விருந்தான்
மலையி னிற்புய வலியினர் மன்னவர் யாரும்
கலைகள் [7]கற்றவர் கனவட [8]திசையினி லடைந்தார், (25)

அடைந்து மற்றவர் யாவரு மடங்கொணுப் பதியில்
மிடைந்த தானையை நிறுவியே தூதரை மிகுநீர்
[9]கடந்து கப்பலி லிருபிறப் பாளர்பின் னவர்கள்
மிடைந்தி வண்வர வுரைமென வவருரைத் தனரால். (26)

(எழுசீர் ஆசிரிய விருத்தம்)

ஆருடன் [10]புகல்வ [11]தெனவவ ருரைப்ப [12]வழகிளஞ் சிங்கமாப்
பாணன்
சீர்பெறு மெய்த்தே வன்திட வீர [13]சிங்கமாப் பாணனி ராசிங்கன்
பேர்பெறு நல்ல வாகுவென் றுரைக்கும் பேருட னேதியந்நாளி
னேர்பெறு பதினெண் சாதியுள் ளவரு மிவ்விடம் வரவிசைத்
திடுமின். (27)

---

1. மதியினுள் சமதாகி யென்று (அ. ஏ.),
 மதியினுள் சமதூதியென்று (அ. ப.)
 மதியினுள் சாமதூதி யென்று (சி. ப.)
2. உரைப்பவள் (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
3. விளங்கடங் காநற் (தி. ஏ.)
4. நீரரசாளென (தி. ஏ.), (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
5. பகன்றான் (அ. ப.)
6. தோரொரு (அ. ப.)
7. கற்றவர்க்ள் வட (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
8. திசைதனி (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
9. கடைந்த (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
10. புகல்வோ (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
11. மென்றவ (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
12. வழகுள (தி. ஏ.)
13. சிங்கனே டத்திமாப் பாணன் (அ. ப.)
 சிங்கமாப்பாண னிராசசிங்கன் (தி. ஏ.)

மதுரைநல் மருங்கூர் [1]திருச்சினுப் பளியின் மலைநகர் மாமலை
யாளந்
துளுவைநன் னாடு [2]தொண்டைமண் டலமே தொடுவட கிரிநகர்
சேரப்
[3]பதிகளெங் கணுமா யவதரித் துள்ள பலபல குலத்தினுள் ளவரு
மெதிர்வரும் [4]படைவென் றிடவர விசைமி னெனவவ
ரிறைஞ்சியே கினரால். (28)

எண்சீர் ஆசிரிய விருத்தம்)

சீர்வளரு முல்லைமா லாண னென்போன்
[5]சிவலைமா லாணனரு ளாளி யண்ணல்
பேர்வளரும் [6]சருகுமா லாண னென்போன்
பேர்பெரிய வாட்சிங்க [7]வாராட்சி யென்போ
னேர்வளரு முள்ளிமா நகர்சென் றங்க
ணிலங்குதா மரைக்குளமுண் டாக்கிப் பின்னர்
ஊர்வளருஞ் [8]சாண்டாருக் குரிய வேவ
லுகந்துபுரிந் திருந்தனர்க ளுவமை யில்லோர். (29)

அப்பொழுது [9]கலிமூவா யிரத்து முந்நூ
றுனவரு டஞ்சென்ற தந்நா டன்னிற்
செப்பரிய வல்லியர சாணி யென்னுஞ்
செந்திருவுக் குலகியல்முத் தருள வேண்டித்
[10]தப்பரிய வசியர்குலத் துதித்தோன் வீர
நாராயண னெனவுரைப்போ னோட மேறித்
தப்பலைசேர் தருபுயலுக் கஞ்சி யேகித்
தண்கடலில் மலையதனைச் சார்ந்தா னன்றே. (30)

---

1. திருச்சிராப் பளியின் (அ. ப.), (தி. ஏ.)
2. தொண்டைமண்டலங்கள் தொடு (அ. ப.)
   தொண்டைமண்டலங் ககனந்தொடு (சி. ப.)
3. பதியதெங்கணுமா (தி. ஏ.),
   பதியதெங்கணுமே (அ. ப.),
   பதியதெங்கணு (சி. ப.)
4. படையோ டிவ்விடம் வரவே (அ. ப.),
   படையிவ் விடம்வர (அ. ஏ.), (சி. ப.)
5. சில்லை (தி. ஏ.)
6. சருகி மாலாணன் (அ. ஏ.), சருகி மலாணன் (சி. ப.)
7. ராட்சி (தி. ஏ.)
8. சான்றூர்க்கு (அ. ஏ.), (சி. ப.), சான்றூர்க்கே (அ. ப.)
9. கலியுகம் மூவா (தி. ஏ.), (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
10. ஒப்பரிய (அ. ஏ.), (அ. மு.), (சி. ப.)

அம்மலையைக் குதிரைமலை யென்ன வோதி
யதனிடைநாய்க் குட்டிமர மமைத்துப் பின்னர்
பொம்மலுறு பொற்றலைக்கஞ் சாச்சஞ் சீவி
பொன்னிரும்பு வெள்ளியெனப் புனைய வல்ல
வெம்மருந்து மம்மலையி லியற்றி யானை
யெழுபதினு யிரஞ்சுமந்த பொன்னுங் கூட்டி
யம்மலையி னிடைவைத்தே காளி யென்னுந்
தையல்நனை யிறைஞ்சியவண் சார வைத்தான். (31)

அன்னதற்பின் கரையினிற்கள் ளச்சி லாப
மாழ்ந்தகடற் சிலாபமென வமைத்துப் பின்னர்த்
தன்னிகரற் [1]றிலங்குமெழி லைய னுரைத்
தாவறுசிர்க் கடலதனுக் கருகு வைத்துப்
பின்னரவன் செட்டிகுளப் பதியில் வந்து
பேர்பெறுவவ் வாலையெனு [2]நதியுண் டாக்கி
நன்னகர்செட் டிக்குரிய குளமென் றோர்பேர்
நாட்டினுன் [3]நாவலர்கள் நயந்து [4]போற்ற. (32)

சந்திரசே கரன்கோயில் தனையுண் டாக்கித்
தாரணியுள் ளோரெவருந் தாழ்ந்து போற்ற
வந்தநதிக் கொருபுடையோர் கிணற்றின் மீதி
லறுபதினு யிரம்யானை சுமந்த பாரந்
தந்திடுபொன் னையும்வைத்துச் சடா சுமுனி
[5]சாத்தனும்வைத் தேகாலஞ் சென்று னப்பா
லந்தநகர் பறங்கியர சாண்டா னந்நா
[6]ளதிருட்டா னெனும்பறங்கி யரசை யாண்டான். (33)

முள்ளிமா [7]நகரதனிற் [8]சாண்டா னென்போன்
முறையதனு லரசுபுரிந் திடலு மொய்ம்பார்
கள்ளவிழுங் கணுக்கேணி நகரைக் காத்த
காவலவன் வில்லிகுலப் பறைய னென்போ
னெள்ளளவு மெவர்தமக்கு மொன்று மீயா
னிருந்தரசை யாண்டிருந்தா னிறைய தாக
[9]நள்ளறுசெங் கருவியுடைக் கைய னன்னோர்
நன்மலையி லரசெனவந் தணுகி னானே. (34)

---

1. றிடுமைய னுரை யந்தத் (தி. ஏ)
2. மதிலுண்டாக்கி (சி. ப.)
3. நாவலர் (அ. ஏ.), (அ. ப.)
4. கூற (தி. ஏ.)
5. சாத்தானையும் வைத்தே (தி. ஏ.)
   சாத்தனையும் வைத்தே (அ. ஏ.), (சி. ப.)
   சாத்தனை வைத்தே (அ. ப)
6. திசிட்டான் (அ. ஏ.), திருட்டா (அ. ப.), திசிட்டன் (சி. ப.)
7. நகர்தன்னிற் (அ. ப.), (சி. ப.)
8. சான்று ரென்போர் (அ. ஏ.) (அ. ப)
9. நள்ளுறுசெங் (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)

வாழ்ந்திருக்குங் காலமதிற் றனிக்கல் லென்னும்
வரையதனிற் [1]சகரனென்று மகர னென்றுந்
தாழ்ந்தகுல வேடர்படை யுடனே கூடித்
தரணிதனி லரசாக வாழு நாளி
[2]லாழ்ந்தமனத் தரக்கரிரா மருக்குத் [3]தோற்றே
[4]யகன்றராட் சதர்கிழக்கு மூலை தன்னி
லாழ்ந்தவிழி யோர்மேற்கு மூலை நாட்டி
லரசுபுரிந் தாரகில முடையோ ரென்ன. (35)

இன்னவகை கொடுமைமுறை யாக வங்கண்
இயலரசு புரிகின்ற வியல்பை நாடி
மன்னவர்க ளுள்மறுகி யிருப்ப முன்னர்
வழிச்சென்ற தூதன்சொன் முறையி னாலே
யந்நகரில் மன்னவர்தங் குலத்தில் வந்தோ
[5]ராரியவங் கிசமெனவாங் காரம் பூண்டோர்
மின்னிலங்கா புரிநகரங் காண வேண்டி
விரும்பியோ டங்களின்மீ தேறி னரால். (36)

திருமருவு கறுத்தவரா யசிங்கந் தானும்
சேனையுடன் [6]தில்லியெனப் பேர்பெற் றோரும்
வருமரசு திடவீர [7]சிங்க நாதன்
வாகுபெறு குடைகாத்தான் முடிகாத் தானு
மருமருவு மலைநாடன் நல்ல வாகு
மாதேவன் றன்னோடு மலர்பூ [8]வங்கி
தருமருவு ராசசிங்கன் சிங்க வாகு
[9]தாதுகிசேர் மார்பினன்சோ தையனென் போனும். (37)

---

1. சகராரென்றும் மகராரென்றும் (சி. ப.)
2. காழ்ந்த மனத் (அ. ப.)
3. தோற்றுக் (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
4. கணராட் (அ. ஏ.), கானராட் (அ. ப.), (சி. ப.)
5. ரரியவங் (தி. ஏ.)
6. தில்லியெனுந் திரியும் பூமி (தி. ஏ.)
7. சிங்கந்தானு (தி. ஏ.), சிங்க நாதனும் (அ. ஏ.) (சி. ப.
8. வந்தி (அ. ப.), (சி. ப.)
9. தாததிசேர் (அ. ப.), (சி. ப.)

அங்கசிங்கன் கட்டையர்க லிங்க ராச
னருள்முடியோன் சுபதிட்டா வாதி வீரன்
துங்கமுறு கேப்பையினு ரூமைச் சியார்
சொல்லரிய யாப்பையினுர் சோதி வீரன்
கங்கைமகன் கலைக்கோட்டு முடியோன் [1]வீர
கச்சமணி முடியரசன் கபாலி வீரன்
செங்கைதனில் வளையுடைத்தோன் சொக்க நாதன்
சேதுபதி திறலரசு புரியும் வீரன். (38)

இளஞ்சிங்க மாப்பாண நல்ல தேவ
னெழுந்தனன் [2]முடியரச னியற்கு மாரன்
களஞ்சிறந்த தானத்தார் [3]வரிப்பத் தாரும்
[4]கபாலியமர் மாமுனைத்தி வார்கள் தாமும்
வளஞ்சிறந்த நல்லமாப் பாண தேவன்
வாகுசிங்க பூபதிவங் காள ரோடு
குளஞ்சிறந்த [5]குளக்கோடன் கிளையில் வந்த
கோபகிரி வீரவா கென்போன் ருனும் (39)

[6]கைக்குளர்சான் டார்குயவர் வலைஞர் சீனர்
காராளர் [7]திமிற்பரவ ரிவர்க ளோடு
மைக்குழலார் நட்டுவர்மா மறவர் மிக்க
மலையகம்நல் லகம்படிகோ முட்டி யானோர்
தக்கவர்கன் [8]கன்னடர்சிங் களவர் துச்சர்
தட்டார்கன் ஞர்கொல்லர் தயவின் மிக்கோர்
எக்குலமுங் கூடியாழ்ப் பாணந் தன்னி
லிதமுடனே சிறந்துவீற் றிருந்தார் மாதோ. (40)

---

1. வீரன் (தி. ஏ.)
2. மாமுடி மன்ன ரிவரைச் சூழக் (அ.ப.)
   மாமுடி யரச ரிவரைச் சூழக் (சி.ப.)
3. வரிப்பற்ருருங் (அ. ஏ.), (அ. ப.)
4. கபாலிமுனை தீவார்கள் தானும் (தி. ஏ.)
   கபாலிய முனைத் தேவர்கள் தானும் (சி. ப.)
5. குளக்கோடர் (அ. ஏ.), (அ. ப.)
6. கைக்குளர் சான்ருர் (அ. ஏ), (அ. ப.), (சி. ப.)
7. திமிலர் பரவர் (தி. ஏ.), (அ. ஏ.), (சி. ப.)
8. தக்கதொரு (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.), (தி. ஏ.)

வீற்றிருந்த திடவீர சிங்கன் ருனும்
மேன்மையுடன் கணுக்கேணி நகரிற் சென்று
தாற்றுடைய பறையர்தமைச் [1]செயித்துத் தானே
தாரணியி லரசனெனத் தயவி னேடு
நாற்றிசையும் புகழவீற் றிருந்த பின்பு
நல்லமா [2]லாணனுடன் நகரி தன்னிற்
காற்படைஞர் புகழுஞ்சந் திரவன் [3]சாணர்
கிளையழிக்க மெய்த்தேவன் கடிது சென்ருன். (41)

சங்கமுறு சந்திரவன் கிளையானேரைச்
[4]சயித்தவன் தன்னுடைய பற்ருக வாண்டான்
அகந்தற்பின் நீலயினுர் வாகு தேவன்
அவர்கள் தனிக் கல்லதனிற் சார்ந்து வேடர்
பொங்குகிளை யதனைநீ ருக்கி யங்கண்
போந்தரசு புரிந்திருந்தார் புவியி னூடே
யங்கணிராட் சதபூமி யாயி னேரை
யழிக்கவென்றே யிளஞ்சிங்க வாகு சென்ருன். (42)

சொல்லரிய பூதங்கள் தம்மை வாட்டிச்
[5]சேர்ந்ததிறற் பகைவரையுந் தொலைத்துப் பின்னர்
கள்ளமரு மிளஞ்சிங்க வாகு வென்போன்
கருணையுட னரசுபுரிந் திருக்கும் நாளில்
நல்லமருங் கருவியுடைக் கைய னீல
ருனவனை யழிக்கவென்றே யுபாய மோடு
தில்லைநகர் தனில்வாழுஞ் சுபதிட் டென்போன்
சென்றவனைக் கொன்றரசு புரிந்தான் மாதோ. (43)

கட்டையர்கா லிங்கர்மலை யகத்தார் கன்னர்
காசினியிற் கச்சாயி லிருந்து வாழ்ந்தார்
இட்டமுறு கோவியர்க ளோடு தெல்லி
யெனும்பெண்ணே பழையெனுமா நகரில் வாழ்ந்தாள்
திட்டமுறு சாவகச் சேரி தன்னிற்
றிடமுடனே யகம்படியார் குயவர் கொல்லர்
[6]ஒட்டியர்முக் கியரும்பூ நகரி யென்னு
மெழில்நகரி லிதமொடுவீற் றிருந்தார் மாதோ. (44)

---

1. சேர்த்துத் (அ. ஏ.), (சி. ப.), செறுத்துத் (அ. ப.)
2. மாண்டனுடை (அ. ஏ.), (சி. ப.)
முள்ளிவளை (அ. ப.)
3. சாண்டார்கள் (தி. ஏ.)
4. சந்தித்தவன் (அ. ஏ.), (கி. ப.), சந்தித்தே (அ. ப.)
5. சோதிமுடி புனைந்துவெகு திரையதாகக் (தி. ஏ.)
6. எட்டியர் மகி (தி. ஏ.)

முத்தமிழ்தேர் மூக்கையினுர் தெல்லி வாணி
முதன்மைசெறி கேப்பையினுர் முதலா யுள்ளோர்
எத்திசையும் புகழ்கரைப்பற் றதனில் வாழ்ந்தா
ரெழுதரிய வூமைச்சி யென்பாள் முன்னு
ளத்தலமே கருவாட்டுக் கேணி வாழ்ந்தா
ளங்கசன்கட் டுக்குளப்பற் றமர்ந்தா னந்நாள்
செப்பரிய சிங்கவா கென்போன் மிக்க
சீருடனே திருக்கோணை சேர்ந்திட் டானே. (45)

ஆயதற்பின் வெருகல்தம்ப லகமந் தன்னி
லரசுகுலம் [1]விளங்கமா முகனே சென்றுன்
சேயுதிக்குங் கொட்டியா ரத்த லத்திற்
சீருடனே வவுதிட்ட னரசை யாண்டான்
மாயனுற்ற கடல்நிகராங் கங்கைக் கப்பால்
வையகத்தோர் புகழமா மன்ன னென்போன்
நேயமுட னரசுபுரிந் திருந்தா னிப்பால்
நீணிலத்தின் முறையிதனை நிகழ்த்தக் கேண்மோ. (46)

தனிக்கல்லில் வாழ்வேடர் கிளையி லுள்ளோன்
சன்மனெடு நாகனும்நல் விதரி தானும்
மனக்கருணை யிலாநீலன் மயில னேடு
வன்மைசெறி முனியனே டொடுக்க னென்பான்
தனக்குநிக ரிலாவர்ம னிவர்கள் போரிற்
சாய்ந்துதா மிருப்பதற்கிங் கெவ்வூ ரென்றே
இனத்திலுயர் காலிங்க னிடத்திற் சென்றே
யெமைக்காக்க வேண்டுமென விறைஞ்சி யுற்ருர். (47)

ஆலடிவ யலில்வைகும் ஆண்டா னென்போ
னவர்குலமாம் பெண்ணணங்கை யன்பாய் வேட்டுக்
கோலமுட னவ்வூரில் முனிய னுற்ருன்
குணமான வர்மன்வற் றுப்பழை வைகும்
சீலமுள்ள காலிங்கன் மருகி தன்னைச்
சேர்ந்திருந்தா னெடுச்கனென்போன் [2]துனுக்கா யூரில்
நீலனுடை மகளைமணம் புணர்ந்து வாழ்ந்தான்
நிலனென்பா னித்திமடு வுற்ரு னன்றே. (48)

---

1. தங்கமா (தி. ஏ.)
2. துனுக்கா வூரில் (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)

வண்மைசெறி விதரிமெய்யான் கல்லில் வாழ்ந்தான்
மயிலனென்போன் நெடுங்கேணி மருவி னுன்பின்
திண்மையுள்ள சன்மனெச்சி மோட்டை சேர்ந்தான்
திறல்நாகன் [1]மானம்புல் வெளியி லுற்றுன்
உண்மையுள்ள [2]நீலயினுன் வாகு தேவன்
உற்றதனிக் கல்லதனி லுகந்து வாழ்ந்தான்
எண்மையுள்ள மறுசாதி யாயி னேர்கள்
இருந்தவிட மின்னதென வியம்பு வோமே. (49)

சொல்லரிய நாயக்க ரடிய மாருஞ்
சோதிநிறச் சூரியசிங் கமென் போனும்
எல்லவருங் கரைப்பற்றங் கதனிச் வாழ்ந்தார்
இங்கிருக்கும் வன்னியசா தியர்க ளானோர்
அல்லமரு நிறமேனி யசுரர் தம்மை
யழிக்கவென்றே யிவர்களா லாகா தென்று
மல்லமரு மைம்பத்து நாலு பேரும்
மாருதம்போ லேசமரி லேகி னுரே. (50)

சமரதனி லெதிர்த்தசுர ருடனே கூடிச்
[3]சங்கோரை புரிந்துவெகு போர்கள் செய்தே
யமரதனில் மாண்டனரைம் பத்தொரு நால்வ
ரசுரர்களா லதுவறிந்தப் பொழுது தன்னில்
நமர்களிறத் தாரெனவே நாடிமிக்க
[4]நாற்சேனை யுரைப்பவன்னி யர்க ளானோர்
விமலையெனுங் காளிதனை நினைந்து வென்று
விரமுடன் பிரித்தைந்து பற்று யாண்டார். (51)

(எழுசீர் ஆசிரிய விருத்தம்)

அற்புத மாகுங் கலியுக மூவா
யிரத்துமுந் நூறுடன் தொன்னூ
றுற்றிடு மிரண்டா மாண்டினி லரச
[5]னுயர்மது ராபுரி நாடன்
விற்கரச் சோழன் றனையடி வணங்கி
விறல்வணி கேசர்மா நாகர்
பெற்றிடு புதல்வி கண்ணகை தனக்குப்
பேரர வின்மணி வேண்ட. (52)

---

1. மாகம்புல் (அ. ஏ.),' (அ. ப.)
2. நிலையினுன் (தி. ஏ.), (அ. ஏ.), (அ. ப.)
3. சங்கொலை (தி. ஏ.)
4. நாவலருஞ் சென்றுரைப்ப வன்னிமார்கள் (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
5. னுயர் மதுராபுரம் (அ. ஏ.), உயர் மதுரா புரி (அ. ப.) னுயர் மதுர புரம் (சி. ப.).

வேண்டிய மாற்றம் விரும்பியங் கரசன்
[1]விளம்புமீ காமனைக் குறித்துத்
தூண்டகு தோளான் வெடியர சனையுந்
துலுக்கனை யுந்தொலைத் தழித்துத்
தேண்டிய தெய்வ மணிதரு கென்னச்
சென்றனன் செருவில்வென் றவரை
மீண்டன னரவின் மணிதனை வாங்கி
விமலைதன் னிடந்தனி லன்றே. (53)

அங்கது போழ்தில் துலுக்கரின் மீரா
வரசன்முக் கியரிரு வர்களும்
[2]அங்கனம் விட்டுக் கரைதனி லடைந்து
கடிதின்மட் டக்களப் பினுக்குட்
டங்கிய வனத்தை நாடது வாக்கித்
தரணியில் வெடியர சிருந்தா
னங்கனம் விடத்தற் றீவினில் மீரா
வந்திருந் தனனினத் துடனே. (54)

அந்தநல் வேளை வன்னிய மார்க
ளனைவருங் கூடியொன் றுகி
இந்தநா டதனுக் கதிபதி யாக[3]
விளஞ்சிங்க [4]வாகுவை வைத்தே
முந்துமெய்த் தேவன் நல்லவா குடனே
[5]முதன்மைபெற் றிடுமிரா சசிங்கன்
தந்திரத் தலைவன் மந்திரி யாகித்
தரணியாள் வீரென விசைத்தார், (55)

அரசினை யியற்றித் திறைகள்கூ ழங்கை
யாரிய னுக்களிப் பீரென்
றுரைசெய்து மதுரைக் கேகின ரன்று
ளுகந்துவன் னியர்களப் பொழுதிற்
றிரைசெறி கடலிற் றிமிங்கிலம் விழுங்கிச்
சென்றிறந் தனரவ் வூரில்
முரசொலி யியம்ப வரசுசெய் திருந்தார்
முதன்மையோ டவர்கள்தே வியரே (56)

---

1. விளங்கு மீ (அ. ஏ.)
2. அங்ஙனே (தி. ஏ.)
3. யென்றே (அ. ப), (அ. ஏ.), (சி. ப.)
4. வாகு வைத்து (அ. ஏ.), (சி. ப.)
5. முதுமைபெற் (அ. ஏ.), (அ. ப.)

வன்னியர் தமது தேவிய ராஞேர்
வாழ்ந்திடு தெருத்தனி லொருத்தன்
தன்னுடைக் குதிரை மீதினி லேறித்
தயவுட னேகின னதனல்
இந்நகர் மீதி லிருந்திட லாகா
திலங்கையி லடைந்திடு வோமென்
றுன்னின ராகிப் பிலிப்பன்மீ காம
னுற்றிட வாளனுப் பினரால். (57)

(எண்சீர் ஆசிரிய விருத்தம்)

அங்கவன்வந் திவர்தம்மை யோட மீதி
லன்புடனே யேற்றிக்கொண் டிலங்கை காணப்
பொங்குகடல் மீதுவரும் வேளை தன்னிற்
[1]போராளி தேவமா [2]னினத்தி ஞேடே
திங்கள்முக [3]நல்லதே வன்சி றந்த
சிரான சோபகிரி [4]சொற்சி றீமன்
[5]அங்கசன் சிங்கத்தி மாப்பா [6]ணதற்ப
ராயனர சன்செல்வக் [7]கோடி தேவன் (58)

தில்லைமழ வாயிரவர் செட்டி வாணி
[8]திசைவென்ருர் கூடலூர் சேர்ந்த வாழ்வார்
முல்லைநாட் டார்பரவர் முதன்மை பெற்ற
முக்கியர்கள் பறையர்வில்லை வாணர் மூவர்
கொல்லர்மா மறவர்நா விதர்கோ முட்டி
கோவியர்கள் தச்சகுடி கன்ஞ ராகச்
சொல்லுமழ வாறுவகைச் சாதி யோருந்
தொகைபெறுதா தர்களுஞ்சங் கமர்கள் தாமும். (59

---

1. போராணி (அ. ஏ.), போரணி (அ. ப.), (சி. ப.)
2. ரிதத்திஞேடு (அ. ப.)
3. மல்ல தே (தி. ஏ.)
4. சுக்கிரீபன் (அ. ப.), (சி. ப.)
5. அங்குசன் (அ. ஏ.), (அ. ப.)
6. ணனற்றப (தி. ஏ.)
7. கொடி (தி. ஏ.), (அ. ஏ.). (அ. ப.), (சி. ப.)
8. திசை வேண்டார் (சி. ப.)

குச்சிலிய ரகம்படியார் குறவர் மிக்க
    கோபால ராகியதோர் குடிகள் தாமும்
நச்சுவிளி நாட்டியஞ்செய் வோர்கள் தாமும்
    நாகநயி னார்தீவில் வாழு வோரும்
மச்சமுறு கடலில்மா முனைத்தி வாரும்
    வருணகுலத் தார்மலைய கத்தார் தாமும்
அச்சமிலாக் குச்சிலியர் தம்மு ளோடே
    ஆரியவங் கிசமறையோ ராயி னோரும். (60)

மாளுவரொட் டியர்தொடியர் [1]மங்கை மார்தம்
    [2]மக்கள்சம் சாருபெற்று வாழு வோர்கள்
வாளுடைய வன்னியர்கள் மூவர் வாணர்
    வாழ்வுபெறு வில்லவர்க ளாயி னோர்கள்
சூழுறுதா ளக்காரர் மேளம் வாங்கா
    சொல்லரிய பேரிகைமற் றுள்ள நாதம்
ஏழுபெருங் கடலுமதிர்ந் ததுவே யென்ன
    இயம்பிடமங் கையரெழுந்தங் கருளி னாரே. (61)

தந்தமனு நீதிமுறை தவரு வண்ணந்
    தான்வந்து கும்பகோ ணத்தி லந்நாள்
மந்திரதந் திரதீட்சை புரியு மந்தச்
    [3]சங்கரா சாரிபதம் வணங்கி யாங்கள்
உய்ந்திடநின் னிலையிலுள் ளோரு மெம்மோ
    டுற்றிடவேண் டும்புகலு விரென் றேதக்
கந்தமலி மார்பினரோ ரைவர் தம்மைக்
    காசினியி லேகுமெனக் கழறி னாரால். (62)

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

[4]சிவகுரு நாதர் முத்துலிங்க தேவர் தாண்டவ ராசரொடு
பலமே யகற்றுந் [5]தெசதரார்பின் பரமர் மிக்க திருக்கூனர்
தவமே சேர்மந் திரம்புகல்வோர் நகரி தன்னிற் குடிசனத்தோ
டவமே புகலா தவர்பதத்தி னன்றே வந்து வணங்கினரால். (63)

---

1. மங்கைமார்கள் (அ. ப.)
2. மாகனக சம்சாடு பெற்று (சி. ப),
   மக்கள் சமுசாடு பெற்று (தி. ஏ.)
3. சாரங்கா (தி. ஏ.)
4. சிவதாந்தர் (அ. ,, .), (அ. ப.), (சி. ப.)
5. தேசத்தார் (அ. ப.), தேசத்தார்பின் (சி. ப.)

வணங்கி னோர்கள் தமைப்பார்த்து
வாழ்வீ ரெஞ்ஞான் றும்மென்றே
யிணங்கு தேவ வாத்தியங்க
ளியம்ப வஞ்ச லீரென்று
கணங்கள் முதல்வன் காட்டுவிநா
யகமூர்த் தியொன்றைக் கரத்திந்து
குணங்க ளுடையீர் குலதெய்வம்
கொண்டே செல்லீ ரெனவுரைத்தார். (64)

(எண்சீர் ஆசிரிய விருத்தம்)

அங்கணது போழ்திநிற்கோ வியர்க ளானோ
ரறுபதுபேர் தமையிட்ட மாக்கி முன்னர்ச்
செங்கைதனிற் சங்கீந்து செல்லு மென்றே
செப்பரிய வீரமகே சுரர்க ளானோர்
தங்களில்முப் பதுபேரும் வீர முட்டி
தன்னில்நாற் பதும்தாத ரெண்மர் தாமும்
[1]மங்கைகணத் துக்குரிய வீர பத்திரன்
வாகுசெறி ஐயனைப்பூ சிப்போர் தாமும், (65)

இங்கிவர்கள் தமையெல்லா மருளிப் பின்ன
ரெழுதரிய மடவார்கள் தம்மை நோக்கி
உங்களுட னிலங்கைநகர் தனக்கு யாமே
நுவன்றிடவே வினவிவரு வோர்க டம்மை
யங்குமது குரவரென வுமது மேலா
மாச்சிரம மளித்துங்க ளினத்தோ ரென்ன
வங்கணஞ்செய் திடுவீரென் றிசைத்து மேலா
மந்திரதந் திரவிதியு மருளி னானே. (66)

அன்னதுசெய் வோமென்றே யவர்க டம்மை
யன்புடனே கூட்டிக்கொண் டிலங்கை மீது
மன்னவர்தே வியர்கள்வரும் வேளை தன்னில்
வாட்சிங்கா ராட்சிமகன் நந்தி யென்போன்
தன்னுடனே யிளஞ்சிங்க மாப்பா ணன்றான்
தாவறுசீர்த் தூதுவரை யழைத்தன் னாளில்
வன்னியர்க ளிறந்தவர லாறு தன்னை
வழங்குமென மதுரைநகர்க் கேவி னாரால். (67)

---

1 அங்கு வணக்கத்துக்குரிய (தி. ஏ.)

ஏகியதூ தூவர்கள்யாழ்ப் பாணந் தன்னி
லிதமுடனே கரைமீதி லிறங்கி யங்கண்
மேவியகன் னியர்கள்தமை வணங்கி யுங்கள்
மேன்மைசெறி தலைவர்கள் யாரு மாண்டார்
தாவறுசிர் நகரியர சன்ற னக்குத்
தயவுபெறு திசையாயங் கொருவ னுற்றுன்
ஆவியென வடங்காப்பற் றைவ ராண்டு
மணிமதுரை யதனில்வந் தருளி னரே. (68)

மனப்பத்தி யுடையதங்கள் மகிழ்ந ரானோர்
வையகத்தி லிறந்தாரென் றுரைத்த மாற்றம்
கனத்திட்ட குழலழகப் பந்தி யானோர்
காதுதனில் நாராசங் காய்ச்சி னுப்போ
லெனக்கொண்ட மங்கையர்கள் செல்வி வாய்க்கா
லெனும்நகரிற் றீதனையுண் டாக்கி யன்னோர்
வனத்தனற் கொண்டலுடன் புகுந்தா லன்ன
மங்கையர்தீத் தனில்வீழ்ந்து மரணித் தாரே. (69)

கண்டிநகர்த் திசையிடமோர் கன்னி சென்றுள்
கடற்சென்ற வன்னியர்கள் கரையின் மீது
பண்டுபோல் வருவரென்றே பாவை போல்வார்
பார்த்திபர்கள் தேவியர்கள் பாரின் மீது
வண்டுசே ருங்குவளைத் தாரன் வன்னி
மாநகருக் கிளஞ்சிங்க வாகு வென்று
பண்டுபோ [1]லயிதாந்தி யெனப்பேர் பெற்றே
பகர்திறைகூ ழங்கையற் கருளி னரால். (70)

[2]அந்தநாள் [3]முதலாய்வன் னிஞ்சி மார்க
ளரசாக வயிதாந்தி யவனே யாக்க
[4]கந்தமணி மார்பனிளஞ் சிங்க வாகு
கருதலர்கள் தமையடக்கித் திறையை யீந்தான்
மந்திரிசுற் றத்தோர்மற் றுள்ள பேர்கள்
மாநகரெங் கணுமேசென் றிருந்து வாழ்ந்தார்
இந்தநகர் தனிலைந்து பற்ற தாக
வேந்திழைமா ரரசுபுரிந் திருந்தார் மாதோ. (71)

---

1. அயிலாந்தி (தி.ஏ.),
அயிராந்தி (சி. ப.)
2. அந்தமொழிப்
3. படியே வன் (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
4. கந்தமலர் (அ. ப.), (சி. ப.)

வன்னியர்கள் மூவர்முக மாலை தன்னில்
வந்திருந்தார் மடப்பள்ளி வலியோர் தாமு
[1]மன்னனெடு மதிவீர மழவ ராய
னழகுசெறி யும்நீல மழவ ராயன்
பொன்னைநிகர் தருமியாழ்ப் பாணம் வாழ்ந்தார்
பூபால வன்னிமைகோ பால ஞனேர்
இந்நிலமேற் றிரியாய்கட் டுக்கு ளத்தி
லிதமுடனே சிறந்துவீற் றிருந்தா ரன்றே. (72)

வில்லவரா யன்நல்லூர் தன்னில் வாழ்ந்தான்
[2]மேவலர்கள் புகழுமடப் பள்ளி யானேர்
எல்லோரும் மானிப்பாய் தனிலி ருந்தா
ரெழுதரிய கவறர்கோ முட்டி யானேர்
பல்லோரும் தில்லைமூவா யிரவர் தாமும்
பார்மீது வரணிநா டதனில் வாழ்ந்தார்
மல்லாருஞ் சிந்துநாட் டார்து லுக்கர்
மாபெரிய கடலோரம் மருவி ஞரே. (73)

சிவதாந்த ரெனுங்குரவ ரிடைக்காட் டார்கள்
செப்பரிய வாவெட்டி மலையில் வாழ்ந்தார்
நவமான முத்துலிங்கர் கதிரை நண்ணி
நாயகரா மிவரென்றே நாம மிட்டார்
பவமேதீர்த் திருக்கூனர் கடலோ ரத்திற்
பரமான மதங்கமுகன் பேரே பெற்ருர்
எவர்தாமும் வியப்பத்தான் டவரா சன்ரு
னியல்புசெறி திரியாயி லிருந்திட் டானே. (74)

(எழுசீர் ஆசிரிய விருத்தம்)

இருந்தனன் றிரியாய் நகரினிற் சுவாமி
யெனும்மனை வள்ளிநா யகிதன்
றிருந்திய மலையும் மண்டபங் களுமே
தேர்ந்தறி வுடன்மிக வியற்றி
வருந்திநல் லரனைப் பூசனை யியற்றி
வாகுட னிருந்தன னிப்பால்
பெருந்திரு வினைநே ராமென வுரைக்கும்
பெண்ணணங் கையுமன முடித்தே. (75)

---

1. மன்னநெடு (தி. ஏ.)
2. மேலவர்கள் (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)

(எண்சீர் ஆசிரிய விருத்தம்)

கள்ளவிழு மலர்ச்சோலை தன்னி லெய்திக்
காட்டுவிநா யகனைப்பூ சித்து வாழ்வோர்
வள்ளல்தெச ரதக்குரவர் தாமும் வெள்ளைக்
கையாச்சி யென்றுரைக்கும் மாது தானும்
தள்ளரிய [1]கோவியரி டம்போ னார்கள்
தன்னிலறு பதுபேர்சங் கூதி னோர்கள்
வள்ளலடி பணிந்தருளு மிக்க முள்ளி
மாநகர மீதிலிருந் தருளி னரால். (76)

சங்கமர்கள் முப்பதுடன் வீர முட்டி
தன்னில்நாற் பதுதாத ரெண்மர் தாமும்
வங்கணஞ்சேர் கெருடாவி லிருந்து வாழ்ந்தார்
வாகுசெறி [2]பள்ளுவிலில் வருணந் தன்னிற்
றங்கியகுச் சிலியர்பப் பரவர் சோனர்
தாவறுசீர் வசியர்கரை யார்கள் மிக்க
சிங்களவ ருடன்சினர் மறவ ரோடு
சீர்திகழும் [3]நுகரைநகர் சேர்ந்திட் டாரே. (77)

[4]காவலவர் வங்கிஷத்தோன் தேவ ராயன்
[5]கதித்திடுநற் கிளைகாத்தான் கோடி தேவன்
ஏவர்களும் புகழ்கந்த வனத்தா னென்போ
னிவர்கள்செட்டி குளப்பதியின் முதன்மை யானார்
தாவுநகர் மன்னவனத் துங்க ராயன்
சதுரகிரி யோன்பனங் காமந் தன்னில்
மேவலர்கள் [6]புகழவீற் றிருந்தான் மிக்க
மேன்மையுடன் யாவர்களும் போற்ற மாதோ. (78)

---

1. கோவிய ரிட்டம் போனோர்கள் (தி. ஏ.)
2. பள்ளிவிலி (அ. ப)
8. நுகரைச் (இ. ப.)
4. கோவலர்கள் (அ. ப.)
5. கோதறுநற் (அ. ப.)
6. பரவவீற் (இ. ப.)

மத்தகிரி யோன்சுபதிட் டாதி வீரன்
வங்கிஷத்துக் குவமையில்லான் வாகு நாதன்
தித்தமிதி யென்றதிரத் தாள மேளஞ்
சிறக்கவே மன்னவருக் கதிப ராஜன்
அத்தகிரி [1]யோன்மகிழச் சோதி நாத
னனுதுங்க நேத்திரச் சிங்க வாகு
வித்தலமேற் றுணுக்காயென் றுரைக்கு மூரி
லெழில்பெறவே வீற்றிருந்தா ரெவரும் போற்ற. (79)

[2]மேலுற்ற [3]நகரில்நிலை யானோர் தாமும்
வீரநகர்த் தேவர்கிளையாயி னோரும்
மாலுற்ற [4]பழமுறைசே ரிலங்கை காத்த
[5]வன்னபோ தவன்வாரி யென்போன் றூனு
மேலுற்ற புகழாக விருந்தா ரிப்பா
லெழுதரிய கட்டுநகர்க் குளமீ தங்கண்
சாலுற்ற சம்பந்த மூர்த்தி தானும்
சனக்கிளையு மதிவீர முறவே வாழ்ந்தார். (80)

அந்நாளிற் கலியுகமைஞ் ஞூற்றின் மேலு
மாயிரமூ வகைசெல்ல வரசர் யாரும்
தொன்னுளிற் றகைமையின்றிக் கொடுங்கோ லோச்சித்
தொல்லுலகு புரந்திடலுந் துயர்ந்து நாட்டில்
எந்நாளு முறைசனங்க ளாற்று வண்ண
மிரங்கிமன [6]வரந்தையுடன் சிலவோ ரேகி
மன்னுன விரவிகுலத் துக்கு மேலான்
மகிபனும் பரராசன் மருங்குற் றூரே. (81)

(கலித்துறை)

மன்னவன் பாதம் வணங்கிநின் றஞ்சலித் திடலும்
மன்னர் மன்னவ னவர்தமை யருளொடு நோக்கி
யெந்நிலத் துள்ளி ரிரங்கிய தேதென விசைப்பத்
தொன்னிலக் காதை யாவையுந் தொகைபெற வுரைத்தார். (82)

---

1. யோன்கீழ்சேர் (அ.ஏ.), (அ. ப.), (சி. ப.)
2. மேம்பற்று (தி. ஏ.), (அ. ஏ.), (சி. ப.)
3. நகரில் நீலயினுர்தானும் (தி. ஏ.)
4. பழமறைசேர் (தி. ஏ.)
5. வன்றபோதவன் வாரி (தி. ஏ.)
6. வாஞ்சையுட (சி. ப.)

உரைத்த வாசக மனைத்தையு மன்னவ னுணர்ந்து
[1]திருத்த ருந்திறற் றம்பிமார்க் கித்திறஞ் செப்பி
யுரைத்த நாற்படை தன்னொடு மேகுது மென்ன
விரைத்த மாலிகை மார்பினர் [2]மூவரு மிசைந்தார். (83)

பட்ட மிக்குய ரானைமேற் பணைமுர சேற்றி
யிட்ட மாகிய நமதுசே னைபதி யெவருந்
தொட்ட நாற்படை தம்மொடும் வருகெனச் சொல்லி
முட்டி லாதபே ராழியான் மொழிகுவித் தனனால். (84)

அந்த வேலையிற் றானைகள் [3]யாவையு மயலில்
வந்து கைதொழு தேத்திட மகிபதி மகிழ்ந்து
விந்தை [4]சேரிள வல்செக ராசன்சங் கிலிமன்
புந்தி யாலுயர் மந்திரி மாரொடும் புகன்றே. (85)

ஓட மீதினி லேறிடப் பணைமுர சொலிப்ப
நீடு சல்லரி மத்தளம் கொம்புயாழ் நிகழ்த்த
[5]ஆடு மாதர்கள் வலம்வர வளக்கரை யிகந்து
[6]மாடி லங்கையின் வடகரை தன்னில்வந் தனனால். (86)

படங்கு மாளிகை சமைத்ததி லிருந்துதன் படையிற்
றிடங்கொ [7]ளாங்கிர தேவனைச் செய்யதாண் டவனைத்
தடங்கொ ளுவகை யரசர்பாற் றூதனுப் பிடவும்
விடங்கி ளர்ந்தென வெழுந்திரு திறத்தரும் விளைத்தார். (87)

பட்டி றந்தனர் சிலர்சிலர் படாதவர் பயந்து
கெட்டு மாதிர மெங்கணுங் கரந்தன ராக
அட்டு மன்னர்தங் கொடியகோல் முறையினை யகற்றி
இட்ட மானசெங் கோல்முறை யரசியற் றினனால். (88)

---

1. திருத்தகுந் திறற் (அ. ப)., (சி. ப.)
2. முற்றுமே (அ. ப.), (சி. ப.)
3. யாவரு மயலில் (அ. ப.), (தி. ஏ.)
4. சேர் செகராச சேகரன் சங்கிலிமன் (தி. ஏ.)
5. பாடு (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
6. வாடிலங்கையின் (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
7. ளங்கிர (தி.ஏ.)

தென்னி லங்கையி லுறைந்திடு சினவுவே லரசன்
[1]அன்ன தற்பினர்ச் சினகர மியற்றிட வமைந்த
தன்ன கர்த்தொண்டை மண்டலந் தனிலுகந் தருளுந்
*கன்ன தேவருக் கொருதிரு முகமனுப் பினனுல். (89)

(அறுசீர் விருத்தம்)

அன்னதிரு முகமதனிற் [2]பாயிரமக் கரமெல்லா மங்கனேர்ந்து
மன்னிரவி குலத்தோன்றல் பரராச னுயிர்த்தோழன் மகிழ்வி
னேடும்
தென்னிலங்கை யேகுதற்குச் சிவலிங்கம் வேண்டுமெனச்
சிந்தை செய்து
பன்னுதமிழ் வளர்காஞ்சிப் பதியதனிற் சிவகாமி பக்கஞ் சென்றே.
(90)

எங்குலத்தோன் பரராச னிலங்கைதனி லரசுபுரிந் திடுதற் கேகப்
பங்கமிலாச் சிவகுரவர் தம்முடனே சித்திநிதம் பயில வேண்டித்
துங்கமுட னிலங்கைவரை யனுப்புகவென் றனனருள்செய்
தோகா யென்ன
மங்கைமன முருகிமணி கண்ணிகையெ னுந்தீர்த்த மரபி னுடி. (91)

ஆலமெனக் கரியமுகத் தைங்கரனை யிளவல்கும ரேசன் றன்னைச்
சீலமுட னவர்க்குதவித் திருநாம மூர்மூத்த [3]நயினர் சித்திர
வேலென்ருே திடுவீரென் றருளியவர் பாதநிதம் பூசை செய்ய
நால்வருண [4]மதற்குறவாங் கங்கைமகார் தமையழைத்து
நாடி யோதி. (92)

சதுர்வேத மறுசாத்திரஞ் சகலகலை யுணர்ந்தருளுஞ் சந்திர சேகரன்
துதிகூறுந் துங்கமாப் பாணனிவர் தமையழைத்துத்
தொழுமென் னுளும்
எதுதீமை வரினுமவை யடராம லிரட்சைபுரி [5]தெய்வ மென்றே
மதிநேரு முகமடவாள் விடையளிக்க வனைவரையு மனுப்பி
னனே. (93)

---

1. அன்னதற் பின்னரசின் நகரமியற்றிட அமைந்த (சி.ப.
2. பாயிரமதகல மெல்லா (அ.ஏ.) (அ. ப.), (சி. ப.)
பாயிரமலக்கல மெல்லா (தி. ஏ.)
3. நாளில் சித்திர (சி. ப.), தான சித்திர (தி. ஏ.)
4. மறைக்கிழவர் (அ. ப.), (சி. ப.)
5. தெய்வமிவையென்றே யோதி (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
* கிருஷ்ண தேவராயர் (1509—30)

பரராச மன்னவன்றன் மங்கையர்க [1]ளறுவரொடு பாங்கி மாரும்
வரைநேரும் [2]புயத்துங்க மாப்பாணன் மதிநாமன் வன்னி நாதன்
உரைவேத முணர்வல்ல விப்பிரரும் வைசியரு முவப்பி னேடு
திரைசேருங் கடலோரஞ் சேர்ந்தோட மதிலிவர்ந்து சென்றுர்
மாதோ. (94)

மறுகுலத்தோர் மறவரொடு மராட்டியர்கள் குயவர்கன்னர்
வங்கர் கொங்கர்
கறுவுமனக் கணிகையர்கள் நட்டுவவாத் தியகாரர் கரையூ ரானேர்
அறிவுமிகு மகம்படியா ரணிமிகுத்த [3]கோவிடைய ராணிக் காரர்
உறுமீரங் [4]கொல்லியர்கள் கேசவினை முடித்திடுவோ ருவப்போ
டேக. (95)

அந்தவனை வோர்களையு மன்னவர்கள் மன்னவன்பார்த்
தன்பி னேடு
கந்தமலி தாரிளவல் செகராச சேகரனைக் கருணை கூர
இந்தயாழ்ப் பாணமதி லிருக்கவென்றே சித்திரவே லரையு மீந்து
வந்துமுள்ளி மாநகரிற் [5]கோட்டையும்நற் சினகரமும்
வகுப்பித் தானல். (96)

ஊர்முத்த நயினரைக் கோவில்தனி லுறையவைத்தங் குண்மை
யாகச்
சீர்பூத்த சந்திரசே கரன்பூசை செய்யவெனச் செப்பி நாளும்
ஏர்பூத்த பொற்பணங்க ளறுபத்தொன் றீந்துதிருப் பூசைக்கென்று
வார்பூத்த முலைமடவார் தங்களொடு பரராச மன்னன்
வாழ்ந்தான். (97)

தன்கோட்டைக் கருகாக வன்னியநா தனையங்கட் சார வைத்துப்
பின்கூட்ட முடன்வாழும் பரிசைகத்திக் காரரையும் பெலமதாக
மன்கூட்ட வரசுகா [6]வலன்கணக்கன் முதலோரை மருங்கில்
வைத்துப்
பண்கூட்டச் சாதியெல்லா மோரிடமாய் வடபாகம் பயிலச் செய்து.
(98)

---

1. ளறுபதின்மர் (தி. ஏ.)
2. மரபிலுறு துங்க (தி. ஏ.)
3. கோவியர் (அ. ஏ.) (சி. ப.)
   கோவியர்கள் (அ. ப.),
4. கொல்லியொடு (தி. ஏ.)
5. கோட்டையு நன்னகரமுமே (அ. ப.)
   கோட்டையு மரசின் நகரமும் (சி. ப.)
6. வற்கணக்கன் முதலோரை (தி. ஏ.)
   வலர்கள் முதலானேரை (அ. ப.)

எந்நாளு மிம்முறையே யாவரையும் வாழ்விரென் றிருத்தி யங்கண்
[1]மன்னன விளவலெனுஞ் [2]சங்கிலியை வாவெட்டி சாரச் செய்து
முன்னோர்க்குப் புரிபூசை நிதந்தெரிசித் தேமுள்ளி வளையா மூரில்
மன்னன விரவிகுலப் பரராச சேகரனும் வாழ்ந்தா னன்றே. (99)

திங்கடொறுந் திங்கடொறுந் தம்பியர்செய் முறைநாடித் திசைக டோறும்
எங்குமவன் றன்னுணை யினைச்செலுத்தித் திருப்பூசை யியல்பி னுடித்
தங்கலில்லா வகைநடத்தி வேதமறை யோர்க்கிசைந்த தான [3]நல்கி
அங்கிகரு மங்கணிதந் தவருமலினிதியற்றி யரசை யாண்டான். (100)

(கலித்துறை)

இந்த நன்முறை யாலிருந் தரசியற் றிடவு
முந்தை யூழ்வினைப் பகுதியால் முதுகினிற் பிளவை
வந்தி றந்தனன் மன்னவன் மங்கையர் பலருஞ்
சிந்தை கொண்டுநீ டங்கியில் [4]வீழ்ந்துடன் சிதைந்தார் (101)

வன்னி நாதனும் வாள்கொடு தன்னுயிர் மடித்தான்
இன்னல் [5]செய்தனர் [6]சனமிவை யாவையு மாற்றி
முன்ன மென்னவே யரசுகா வலன்முறை புரிந்தான்
அன்ன நாள்வரை யானதிக் கதையென வறைந்தான். (102)

கற்பி னேடெரி புகுந்திடுங் கன்னிய ருலகில்
அற்ப கம்புரிந் தருள்புரி நாச்சிமா ரானூர்
வற்ப னுகிய வன்னிய நாதனும் வளங்கூர்
இப்ப திக்கணே தேவுரு வாகின னிருந்தான். (103)

அன்ன தன்மைகள் மொழிந்திடி னுவுமொன் றதனுல்
என்னில் முற்றுமோ இயன்றுள வியம்பினே னெனது
கன்னி பாலக னருளினு லென்னலுங் கருவூர்
மன்னு நற்றவர் மகிழ்வுட னுறைந்தனர் மாதோ. (104)

---

1. தன்னுன (தி. ஏ.
   மின்னுன (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
2. சங்கிலிமன் (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
3. மீந்து (அ. ஏ.), (அ. ப.)
4. வீழ்ந்துடல் (அ. ஏ.), (அ. ப.), (சி. ப.)
5. எய்தினன் (சி. ப.)
6. சௌமியம் (அ. ப.), அரசேனென இவை (சி. ப.)

# சொற்றொகை வகுப்பு

| மக்கட் பெயர் | செய்யுள் எண் |
|---|---|
| குமுதன் | 9 |
| குலக்கேது | 13,15 |
| குளக்கோடன் | 39 |
| கூழங்கையர் | 70 |
| கூழங்கையாரியன் | 56 |
| கேப்பையினர் | 38,45 |
| கோடிதேவன் | 78 |
| கோபகிரி வீரவாகு | 39 |
| கோபாலன் | 72 |
| கோளுறுகரத்துக் குரிசில் | 14 |
| சங்கராசாரி | 62 |
| சங்கிலி | 85,99 |
| சகரன் | 35 |
| சதுரகிரியோன் | 78 |
| சந்திரசேகரன் | 93 |
| சந்திரவன் | 41,42 |
| சம்பந்தமூர்த்தி | 80 |
| சமதூதி | 24 |
| சருகிமாலாணன் | 29 |
| சன்மன் | 47,49 |
| சரம்புவன் | 9,11 |
| சிங்ககேதன் | 15 |
| சிங்ககேது | 20 |
| சிங்கத்தி மாப்பாணன் | 58 |
| சிங்கநாதன் | 37 |
| சிங்கமன்னவன் | 20 |
| சிங்கவாகு | 37,45,79 |
| சிவகாமி | 90 |
| சிவகுருநாதர் | 63 |
| சிவதாநதர் | 74 |
| சிவலைமாலாணன் | 29 |
| சீதை | 8 |
| சுக்கிரீவன் | 9 |
| சுபதிட்டு | 5,43,79 |
| சுபதிட்டா | 38 |
| சூரியசிங்கம் | 50 |
| செகராசசேகரன் | 96 |
| செகராசன் | 85 |
| செட்டிவாணி | 59 |
| செல்வக்கொடிதேவன் | 58 |
| சேதுபதி | 38 |
| சொக்கநாதன் | 38 |
| சொற்சிறீமன் | 58 |
| சோதிநாதன் | 79 |
| சோதிவீரன் | 38 |

| மக்கட் பெயர் | செய்யுள் எண் |
| --- | --- |
| மாமாண்டன் | 41 |
| மாமுகன் | 45 |
| மாயன் | 9,11 |
| மாருதப்பிரவை | 15 |
| மாஞகர் | 52 |
| மீகாமன் | 53,57 |
| மீரா | 54 |
| மீராவரசன் | 54 |
| முடிகாத்தான் | 37 |
| முத்துலிங்கதேவர் | 63 |
| முத்துலிங்கர் | 74 |
| முல்லைமாலாணன் | 29 |
| முனியன் | 47,48 |
| மூக்கையிஞர் | 45 |
| மெய்த்தேவன் | 27,41,45 |
| யாப்பையிஞர் | 38 |
| வச்சிரவாகு | 8 |
| வல்லி | 15 |
| வறுமன் | 47,48 |
| வன்னபோதவன்வரரி | 80 |
| வன்னிநாதன் | 94,98,102 |
| வன்னியநாதன் | 103 |
| வாகுசிங்க பூபதி | 39 |
| வாகுதேவன் | 42,49 |
| வாகுநாதன் | 79 |
| வாட்சிங்க ஆராட்சி | 29 |
| வாலி | 9 |
| விதரி | 47 |
| விபூஷணன் | 10,12,18 |
| வில்லவராயன் | 73 |
| வில்லி | 34 |
| விற்கரசோழன் | 52 |
| வீரகச்சமணி முடியரசன் | 38 |
| வீரநாராயணன் | 30 |
| வெடியரசன் | 53,54 |
| வெள்ளைக்கையாச்சி | 75 |
| வையா | 7 |

| குழூஉப் பெயர் | செய்யுள் எண் |
|---|---|
| அகம்படியார் | 44,60,95 |
| அசுரர் | 50 |
| அறுவகைச்சாதி | 59 |
| ஆரிய வங்கிச மறையோர் | 60 |
| ஆணிக்காரர் | 95 |
| இடைக்காட்டார் | 74 |
| இராட்சதர் | 3,35 |
| ஈரங்கொல்லியர் (வண்ணார்) | 95 |
| ஒட்டியர் | 44,61 |
| கங்கைமகார் (வேளாளர்) | 92 |
| கணிகையர் | 95 |
| கபாலிமுனைத் தேவர்கள் | 39 |
| கரையார் | 77 |
| கரையூரார் | 95 |
| கவறர் | 73 |
| கன்னடர் | 40 |
| கன்னர் | 40,44,59,95 |
| காராளர் | 40 |
| குச்சிலியர் | 60,67 |
| குசவர் | 44 |
| குயவர் | 40,60,95 |
| கூடலூர் சேர்ந்த வாழ்வார் | 59 |
| கேசவினைஞர் | 95 |
| கைக்குளர் | 40 |
| கொங்கர் | 95 |
| கொல்லர் | 40,44,59 |
| கோபாலர் | 60 |
| கோமுட்டி | 59,73 |
| கோமுட்டியானோர் | 40 |
| கோவலர் | 60 |
| கோவியர் | 44,59,65,76 |
| கோவிடையர் | 95 |
| சங்கமர் | 59,77 |
| சங்கூநி | 76 |
| சாண்டார் | 29,34,40 |
| சானார் | 41 |

| இடப் பெயர் | செய்யுள் எண் |
|---|---|
| மலைநகர் | 28 |
| மலையாளம் | 28 |
| மாகம்புல்வெளி | 49 |
| மாமுனைத்தீவு | 60 |
| மாவிட்டபுரம் | 16 |
| மானிப்பாய் | 73 |
| முகமாலை | 72 |
| முள்ளிமாநர் | 29,76,96 |
| முள்ளிவளை | 99 |
| மேற்குமூலை | 35 |
| யாழ்ப்பாணம் | 14,40,68,72,96 |
| வடகிரிநகர் | 28 |
| வவ்வாலை | 32 |
| வள்ளிநாயகிமலை | 75 |
| வற்றுப்பழை | 48 |
| வாவெட்டி | 17,74,99 |
| விடத்தற்றீவு | 54 |
| விதரி மெய்யான்கல் | 49 |
| வெருகல் | 46 |
| வைகுந்தம் | 18 |

| பொதுப் பெயர் | |
|---|---|
| அங்கி | 101 |
| அங்கி கருமங்கள் | 100 |
| அயிதாந்தி | 70,71 |
| அரசன் | 11 |
| அரச காவலன் | 102 |
| அளக்கர் | 86 |
| ஆடுமாதர் | 86 |
| ஆச்சிரமம் | 66 |
| இறை | 56 |
| எரி | 103 |
| ஐந்து பற்று | 71 |
| ஓடம் | 58,86 |
| கடல் | 58 |
| கணையாளி | 19 |
| கலியுகம் | 30 |

| பொதுப் பெயர் | செய்யுள் எண் |
|---|---|
| மைத்துனன் | 13 |
| யாழ் | 12 |
| வன்னிச்சி | 71 |
| வாள் | 61,102 |
| விருது | 22 |
| வேதம் | 94,100 |

| தெய்வப் பெயர் | |
|---|---|
| அரன் மகவு | 17 |
| இராமலிங்கம் | 10 |
| ஐங்கரன் | 92 |
| ஐயன் | 65 |
| ஐயனுர் | 32 |
| கன்னி பாலகன் | 104 |
| காட்டு விநாயகமூர்த்தி | 64 |
| காட்டு விநாயகன் | 76 |
| காளி | 31 |
| குமரேசன் | 92 |
| சந்திரசேகரன் | 33,97 |
| சடாசுமுனி | 33 |
| சாத்தன் | 33 |

யாழ்ப்பாணம்

செகராசசேகர மகாராசாவின்

சமஸ்தான வித்துவான்

**வையாபுரி ஐயர்**

16ஆம் நூற்றுண்டிற் செய்த

# வையா பாடல்

"'கோளுறு கரத்துக் குரிசி' லாய கூழங்கைச் சக்கரவர்த்தியே யாழ்ப்பாணத்தின் முதலரசனுவான். அவன் காலம் கி. மு. 101 வரையிலாமென வையா பாடல் கூறும்"

சிலோன் நியூஸ்பேப்பர்ஸ் லிமிட்டெட், 184 ஏ, பண்டாரநாயக்க மாவத்த, கொழும்பு-12.